அருள்மிகு காளஹஸ்தீஸ்வர சுவாமி திருக்கோயில்
அருள்மிகு அபிராமி அம்மன் திருக்கோயில்
திண்டுக்கல்



# ஸ்தல வரலாறு

# முதற்பாகம். புராணப்பகுதி

## முதல் அத்தியாயம்

## புராணம் தோன்றிய வரலாறு

திரைகடல் சூழ்ந்த வையகத்தில் மிகச்சிறப்புற்றோங்கிய "ப்ரஹதாரண்ய" வாசிகளான காத்யாயனர், கௌதமர், முதலிய வேதவிற்பனர்கள் "கோச்சத்ரம்" என்னும் மஹா யாகத்தைச் செய்ய கோகர்ண க்ஷேத்ரத்தையடைந்தனர். குறித்த யாகத்தை சேவ்வனே முடித்துவிட்டு அத்தலத்தில் கோயில் கொண்டருளும் கோகர்ணேச்வர மூர்த்தியை கிருத்திகா ஷோமவார ப்ரதோஷ காலத்தில் தரிசித்து முறைப்படி ஆராதனைகள் நடத்தி, மந்திரம், கிரியை, பாவனை என்ற மூவகையாலும் அர்ச்சித்து, மிகுந்த பக்தி சிரத்தையுடன் தொழுது வழிபட்டு, தாம் தரிசித்த பல தல விசேஷங்களையும் ஒருவருக்கொருவர் எடுத்துரைத்து மகிழ்ந்திருந்தனர். அது சமயம் நைமிசாரண்ய வாசியும், வியாஸ பகவானின் சீடருமான சூதபௌராணிகர் அவண் எய்தினர். அவரைக்கண்ட மற்ற இருடிகள் முகில்கொண்ட மஞ்ஞையெனக் களிப்பெய்தி, அவரை வரவேற்று அர்க்கிய, பாத்ய, ஆசமனாதி உபசாரங்களை முறைப்படி செய்து கூறலுற்றனர்.

"கேளும் ! சூத பௌராணிகரே ! தாங்கள் மூலம் பதினெண் புராணங்களையும், அநேக உப புராணங்களையும் தாங்கள் வியாஸரிடம் கேட்டபடி சொல்ல நாங்களும் அவற்றைச் செவிமடுத்து கிருதார்த்தர்களானோம். அவற்றோடு, ஹாலாஸ்யம், வாரணாசி, காஞ்சிபுரம், மத்யார்ச்சுனம், பஞ்சநதம், கோகர்ணம், சுவேதாரண்யம் முதலிய பல திவ்யக்ஷேத்ரங்களின் ஸ்தல புராணங்களையும் கேட்டோம். இன்று கிருத்திகா ஸோமவார பிரதோஷ தினமாகையாலே தங்களிடம் பத்மாசலக்ஷேத்ர மகிமையைக் கேட்க ஆவல் கொண்டுள்ளோம். எங்கள் விருப்பத்தைப் பூர்த்தி செய்தருளுவீராக" என்று வேண்டிக்கொண்டனர். சூத புராணிகரும் இயைந்து சொல்லத் தொடங்கினார்.

"கேளும் ! தபோதனர்களே ! இராஜபுத்ரன், குருபுத்ரன், தன்புத்ரன், போதிப்பனவற்றை கிரஹிக்க வல்லவன், தமக்குத்தொண்டு செய்பவன், பிறருக்கு எடுத்தோதும் திறமை உள்ளவன் ஆகிய இவ்வாறுவருக்கும் நூல்களை உணர்த்த வேண்டுமென்பது சாஸ்த்ர சம்மதம், ஆயினும் நீங்கள் கோரிக்கேட்ட பத்மாசல புராணத்தை ஆயிரம் நாப்படைத்த ஆதிசேஷனாலும் கூற முடியாது. ஒரு நாப்படைத்த என்னால் அதை எப்படி எடுத்தோத முடியும் ? ஆயினும் தாங்கள் விரும்பிக் கேட்டபடியாலும், இன்று நீங்கள் சொன்னபடி நல்ல சுபதினமாய் அமைந்திருப்பதாலும், எனக்குத் தெரிந்தமட்டில் கூறுகிறேன். பூர்வம் ஸ்வாயம்புவமனவந்தரத்தில் அகஸ்திய முனிவருக்கு பிரம்மதேவனால் இப்புராணம் சொல்லப்பட்டது. அது வியாஸபகவனால் "ஸ்காந்தபுராணத்தில்" உபகரணமாகச் சேர்க்கப்பட்டது. இந்த பத்மாசல மஹாத்மியத்தைக் கேட்பதும், பத்மதீர்த்தத்தை உட்கொள்ளுவதும், பத்மாசலோசர் சந்நிதியில் பஞ்சாக்ஷர ஜபம் செய்வதும், கிருத்திகை, ஸோமவாரம், ப்ரதோஷ தினங்களில் பத்மகிரீசரைத் தரிசிப்பதும், பல ஜன்மங்களின் செய்த புண்ணியத்தால் கிட்டுமேயன்றி யாவர்க்கும் எளிதில் கிட்டுவதரிவது. நீங்களும் நான் கூறப்புகும் பத்மாசல புராணத்தை ஐம்புலன் ஒருமித்து மிக்க பக்தி சிரத்தையுடன் கேட்கக் கடவீர்" என்றார்.

# 2-ம் அத்தியாயம்

## பத்மாசலம் உண்டான வரலாறு

இதனைக்கேட்ட இருடிகள் "ஸ்வாமி ! ஆதியில் பிரம்மதேவன் அகஸ்தியருக்கு இந்த புராணத்தை உபதேசிக்க என்ன ப்ரமேயம் ஏற்பட்டது என்று வினவினார்கள். சூத பௌராணிகரும், அபிராமா சமேத பத்மகிரீசரை மனதில் தியானம் செய்தவராய்க் கூறலுற்றார்.

முன்பு முழுமுதற்கடவுளும், திருநீலகண்டனுமாகிய சாக்ஷாத் பரமேஸ்வரன் பார்வதீ தேவியாரை திருக்கைலையில் மணம்புரிந்த ஞான்று, அம்மஹோர்த்சவத்தைக் காண முப்பத்து முக்கோடி தேவர்களும், திருமாலும், நான்முகனும், யக்ஷகின்னர கிம்புருடாதி பதினெண்கணங்-களும் மற்றும் யாவரும் திருக்கைலையை அடைந்தனர். அதனால் ஜம்புத் வீபத்தின் வடகோடி தாழ்ந்து தென்கோடி உயர்ந்தது, அதனை சமப்படுத்த பரமேஸ்வரன் கும்பமுனியைத் தெற்கே பொதியமலை செல்லுமாறு கட்டளையிட்டார். அவ்வாறே அகஸ்திய முனிவரும் புறப்பட்டுவரும் வழியில் விந்தியபர்வதத்தின் கர்வத்தை யடக்கி, வில்வலன், வாதாபி என்ற இரண்டு அரக்கர்களைக் கொன்று, தன் கமண்டலத்திலுள்ள கங்காதீர்த்தத்தை ஓர் காகம் கவிழ்த்ததன் காரணமாக காவேரி என்ற திவ்ய நதியையும் உண்டாக்கிவிட்டு தெற்கே வந்துகொண்டிருந்த சமயம் லிங்கா காரமாய் நின்ற ஓர் குன்றைப் பார்த்தார். அதன்தோற்றமும், தேஜஸ்ஸும் அவர் மனதைக் கவர்ந்தன. முக்கண் முதல்வனே இவ்வாறு ஸ்வயம்புலிங்கமாக பர்வதாகாரமாய் ஆவிர்பவித்து இருப்பதை தனது ஞான திருஷ்டியால் உணர்ந்தார், உடனே அம்மலையை வலமாக வந்து தோத்தரித்தார்.

"ஹே! மங்கள சொரூபியே! பக்தர்களின் பாபங்களைத் தீர்த்து சிவசாயுஜ்யம் அளிக்கும் பரமகருணாநிதியே, சுந்தரா ! மலையுருக்கொண்டு அம்மலையிலுறையும் ஜங்கம சொரூபமே! அஞ்ஞான இருளை அகற்றி எங்கும் ஸ்வயம் ஜோதியாய்ப் பிரகாசிக்கும் பராபரமே, வேதத்தின் உச்சியில் மலர்ந்த கேவல சைதன்யமே! கோடி சூரியர்களுக் கொப்பாய் ! என் மனதின் அஞ்ஞானத்தைப் போக்கும் ஆனந்த சொரூபமே! அமிர்த வருஷம் போன்ற சீதளமே! அளவிடற்கரிய மகிமை பொருந்திய மலர்ந்த தாமரை போன்று மலை உருக்கொண்டெழுந் தருளிய மஹானுபாவா. இந்த நெல்லிவன நடுவில் சகல புண்ணியதீர்த்தங்களையும் தம் முடியில் வைத்து உலகோர் உய்ய அவதாரம் செய்த அபிராமா பதியே! உன் திருவிளையாடலை யாரே பகரவல்லார்" என்று பலவாறு துதித்துப்போற்றிப் பரவி மீண்டும் மீண்டும் பிரதக்ஷிணநமஸ்காரங்கள் செய்து அஞ்சலி ஹஸ்தராய் சிகரத்தைப் பார்த்தார்.

அங்கு தேவகணங்கள் புடை சூழத்தவம் செய்து கொண்டிருந்து ஸத்யலோகாதிபதியான பிரம்மாவைத் தரிசித்தார். அவரை வலம்வந்து வணங்கி, அடிபணிந்து "கருணாநிதியே! வேதங்களின் பிதாவே! லிங்கா காரமான இப்பர்வதத்தில் வந்து நீரே தவம் செய்வதனால் இம்மலையின் பெருமைக்கு ஓர் எல்லைதானுண்டோ ? இல்லையென்றே கருதுகிறேன். அதன்பெருமையை அடியேனுக்கு உபதேசித்து அருளல் வேண்டும்" என்று பலவாறு வேண்டிக்கொண்டார். சதுர்முகனும் புன்னகைபூத்துச் சொல்லலுற்றார்.

"கேளும்! கும்பமுனியே, தென்கங்கையென்று உலகப்பிரசித்தி பெற்ற காவேரிநதிக்கும், வைகை என்ற மகாநதிக்கும் இடையில் விளங்கும் பிரதேசத்தில் சந்தானவர்த்தினி என்றும் கும்பநதியென்றும் ஈறாறுகளின் நடுவில்,

பலஜாதிபழவிருக்ஷங்களும், பலஜாதி புஷ்பச்செடி கொடிகளும் நிறைந்து வளம் பொருந்திய இந்தநெல்லிவனத்தின் சிறப்பு சொல்லத்தரமல்ல. தேவர்களும், யக்ஷகின்னரர்களும், சித்தசாரணர்களும், வைகா நஸவாலகில்யர் முதலிய ரிஷிகளும், எப்பொழுதும் இங்குவந்து இந்தலிங்கா காரமான ஸ்வாயம்புமூர்த்தியைத் தரிசனம் செய்து பல நன்மைகளையடைகின்றனர். இந்தநெல்லிவனத்தின் விஸ்தீரணம் ஒருகாத அகலம், ஒருகாத நீளமாகும். இந்த திவ்ய பிரதேசத்தில் வசிப்பவர்கள் முக்திதரும் க்ஷேத்ரங்கள் என்று கூறப்படும். ஏனைய க்ஷேத்ரங்களில் வசிப்பவரைவிட பத்துமடங்கு அதிகமான நன்மைகளையடைகின்றனர். மக்களுக்கு இகபர சுகங்களை நல்கி ரக்ஷிப்பதால் இந்தநெல்லிவனம் "தாத்ரீவனம்"[1] எனச் சிறப்புப் பெயரும் பெற்றது. இந்த இடத்தில் நெல்லிமரத்தடியில் செய்யும் சமஸ்தகர்ம்மாக்களும் பதின்மடங்கு பலனை அளிப்பன. மேலும் பசு, தங்கம், வஸ்த்ரம், வெள்ளி இவைகளை வேதம் அறிந்த, ஆஹிதாக்னியிடம்[2] மிகச் சொல்பமாய்க் கொடுத்தாலும் மற்ற இடங்களில் சிறப்பாய்ச் செய்யப்படும்தானங்களைவிடப் பதின்மடங்கு அதிகப்பலனைத் தருவதாகும். அவ்வாறே இவ்விடம் செய்யப்படும் யாகமும் பதின்மடங்கு பலனுள்ளதாகும். பத்மதீர்த்தத்தில் நீராடுவதும், பத்மகிரியை தரிசித்தலும், பத்மகிரியை வலம் வருதலும், அதை அடுத்துள்ள அச்வத்தவிருக்ஷ (அரச மரம்) சேவையும் பத்மாசலோசனின் தியானமும், பஞ்சாக்ஷரஜபமும், அநேக ஜன்மாக்களில் செய்த பாபங்களை உடனே நசிக்கச் செய்வனவாகும். சுக்கிலதுவாதசியிலும், ஸோமவாரத்திலும், ப்ரதோஷங்களிலும், பத்மதீர்த்தத்தில் நீராடி, விபூதி ருத்திராக்ஷம் அணிந்து பத்மகீரிசரை சேவிக்கின்றவர்களும், ஆமலகபத்ரத்தினால் (நெல்லி இலை) ஸஹஸ்ரநாம அர்ச்சனை செய்கின்றவர்களும், பத்மதீர்த்தத்தால் பத்மகீரிசருக்கு அபிசேஷகம் செய்கின்றவர்களும், இம்மையில் சகலபோக பாக்கியங்களையும் அனுபவித்து, மறுமையில் முக்தி எய்துவர். இதற்குச் சந்தேகம் இல்லை என்று ஆணையிடுகின்றேன். மேலும் இந்த தாத்ரீவனத்தில் மூன்றுநாள் வசித்தால் மலட்டுஸ்தீரீகளும், பண்புமிக்க புத்ரர்களை அடைவர். கிருத்திகைப் பெண்கள் அறுவரும் இத்தலத்தில் வசித்து, பத்மதீர்த்தத்தில் ஸ்நானம் செய்து பத்மகீரிசரை வழிபட்டதால் தேவர்கள் பூஜிக்கப்படும் ஷண்முகப் பெருமானையே புத்ரர்களாய் அடைந்து பாலூட்டிச் சிறப்பெய்தினர். அப்படியாயின் இத்தலத்தின் விசேஷத்தைப் பற்றி வேறு என்ன அதிகம் கூறமுடியும்?" என்றார்.

இதைச்செவியுற்ற அகத்தியனார். நான்முகனை நோக்கி ஜகத் பிதாவே, கிருத்திகைப் பெண்கள் எதற்காக இங்கு வந்து வசித்தனர் என்ற விவரத்தை அடியேனுக்குக் கூறவேண்டும் என்று கேட்க, பிரம்மா சொன்னார். "தக்கனுடைய புத்திரிகள் இருபத்திஏழு பெண்களை சந்திரன் மணந்தான், ஆனால் அவர்கள் யாவருக்கும் புத்திரபாக்கியம் இல்லை. இதனால் வருந்திய கிருத்திகைப் பெண்கள் அறுவரும் தம் கணவனிடம் சென்று, புத்திரன் இல்லாத வீடு வீடாகுமா, 'புத்' என்னும் நரகத்தினின்றும் பிதுரர்களை மீட்கப் புத்திரன் அவசியமல்லவா? நல்ல புத்திரர்களைப் பெற்று அவர்களைப் பாலூட்டிச் சீராட்டி வளர்க்காத ஸ்திரிஜன்மம் வீண் அன்றோ? யாழையும், குழலையும் பழிக்கும் அவர்களின் மழலைச் சொற்களைக் கேட்காத செவிகளால் என்ன பயன்? குழந்தைகளைப் பெற்றெடுத்து, வாரி அணைத்து, உச்சிமோந்து,

---

[1] *தாத்ரீ என்ற சொல்லுக்கு "தாயார்", "பூமாதேவி", "நெல்லிமரம்" என்ற பொருள்கள் உண்டு. 'தாங்குகிறவள்', காப்பாற்றுகிறவள், என்பது "தாது" ப்பொருள்.*

[2] *ஆஹிதாக்னி என்றால் தினம் காலம் தவறாது அக்னிவளர்ப்பவன் என்பது பொருள்.*

முத்தமிட்டு, தலைவாரி, பொட்டிட்டுப் பார்க்கும் வாய்ப்பு இல்லையானால் இம்மையில் நாம் என்ன இன்பத்தையடையமுடியும்? வேறு எந்தவிதமான செல்வம் இருந்தாலும், மக்கட்பேறு இல்லாதவர்கள் தரித்தரர்களேயன்றோ? குறுகுறு என்று பார்க்கும் விசாலமான கண்களில் மை தீட்டி, கைகளில் தங்கவளையல்கள் அணிவித்து இடுப்பில் அரைஞாணோடு தமது சிறு கைகளை தரையில் ஊன்றித் தவழ்ந்து வருவதையும், தளர்நடை பழகுவதையும், சிறுதேர் உருட்டுவதையும், சிற்றில் சிதைப்பதையும் காண வாய்ப்பில்லாத கண்களால் என்ன பயன்? ஆதலால் நாதா தாங்கள் புத்திரர்களைப் பெறுவதற்கான உபாயம் நீரே சொல்லவேண்டும்" என்ற அங்கலாய்த்தார்கள். அதைக்கேட்ட சந்திரன், "பெண்களே, நான் என்ன செய்வேன், முன்பு குருபத்தினியைத் தீண்டியதால் ஏற்பட்ட குருவின் சாபத்தால் எனக்குப் புத்திரபாக்கியம் இல்லாமற்போனது. ஆதியந்தமில்லாத முக்கண் முதல்வனே சகல பாபங்களையும் போக்கவல்லவன். அவனைக்குறித்து, அவனுக்குகந்த க்ஷேத்திரத்தில் தவம் செய்வீர்களானால் அவன் உங்களுடைய மனோபீஷ்டத்தைப் பூர்த்திசெய்வான் என்று கூறி அவர்களுக்குப் போக விடைகொடுத்தான். அவர்களும் ஒவ்வொரு சிவஸ்தலமாகச் சென்று ஆங்காங்குள்ள, பல புண்ணிய தீர்த்தங்களில் நீராடி, பரமசிவனை பக்திசிரத்தையோடு வழிபட்டு அநேக யுகங்கள் தவம் செய்தனர். ஆனால் பலன் இல்லை. கடைசியாக என்னைக் (நான்முகன்) கண்டு தமது வருத்தத்தைத் தெரிவித்து, சிவபெருமானை எந்த க்ஷேத்ரத்தில் வழிபட்டால் மக்கட்பேறு அடையலாம் என்று வினவினர். நான் அவர்களுக்கு இந்த தாத்ரீவனச் சிறப்பையும், பத்மதீர்த்தத்தின் மகிமையும், பத்மகிரியின் பெருமையையும் எடுத்துக்கூறினேன். அவ்வாறே அவ்வறுவரும் இவணடைந்து, பத்மதீர்த்தத்தில் ஸ்நானம் செய்து பூர்வத்தில் அந்த பத்மதீர்த்தத்தில் மலர்ந்த தாமரையே மலையாகமாறி லிங்காகாரமாக இருக்கும் பத்மகிரீசரை தரிசித்து அம்மலையை வலம்வந்து பத்மதீர்த்தத்தின் வடகரையில் நிற்கும் அரசமரங்களைப் பிரதக்ஷிணம் செய்து ஒருமண்டலம் வசித்தனர்.

இஃதிவ்வாறாக சூரபத்மனால் துன்புறுத்தப்பட்ட தேவர்களின் முறையீட்டைச் செவிமடுத்த சிவபெருமான் சூரர் குலத்தை அழிக்கவல்ல ஓர் புத்திரனைத் தருவோம். அக்குழவிக்குப் பால் கொடுக்கத் தகுதியுடையவர்கள் கிருத்திகைப் பெண்களேயாவர். அவர்களும் எம்மைக குறித்து நெல்லிவனத்தில் தவம் செய்கின்றனர் அவர்களை அழைத்து வந்து சரவணத்தில் இருக்கச் செய்யுங்கள் என்று திருவாய் மலர்ந்தருளினார். திருமாலும், நான்முகனும் ஏனைய தேவர் குழாமும், தமக்குவர இருக்கும் நல்லகாலத்தை எதிர்நோக்கியவர்களாய் இந்த "தாத்ரீவனம்" வந்து அங்கு தவமியற்றும் கிருத்திகைப் பெண்கள் அறுவரையும் விளித்துப் பெண்களே! உங்களுக்கு கிடைக்க இருக்கும் பாக்யம் பரமனின் பாதியான பராசக்திக்குக்கூட கிட்டாது. பரமன் அருளும் குழந்தைகளுக்குப் பாலூட்டும் வாய்ப்பை இந்த நெல்லிவனத்தில் தவம் செய்ததால் பெற்றீர். உங்களைத்தேடி வந்ததின் காரணமாக இவணெய்தி, லிங்காகாரமான ஸ்வயம்பு மூர்த்தியைத் தரிசித்தோம். அந்தப் புண்ணியத்தின் பலனையும் உங்களுக்கே தந்தோம். ஈசன் ஆணைப்படி விரைவில் நீர் சென்று சரவணத்தில் தங்குங்கள்" என்று கூப்பிட்டார்கள். கிருத்திகா ஸ்திரீகள் அறுவரும் மிக மகிழ்ச்சிடைந்து ஏனைய தலங்களில் அநேகயுகங்கள் தவம் செய்து பெறாத இப்பெரிய வாய்ப்பை இத்தலத்தில் நாற்பது நாள்களில் பெற்றோமே என வியந்து பத்மாசலோசனைச் சேவித்து, நமது ஆனந்தக் கண்ணீரால் அவரது பாதமலர்களைக் கழுவி, மீண்டும் மீண்டும் தரையில் விழுந்து அடிபணிந்து அஞ்சலி ஹஸ்தராய்ப் பத்மகிரீசரை பலநாமாக்களால் வாயாராப் போற்றிப் புகழ்ந்து, தேவர்கள் புடைசூழ சரவணத்தை யடைந்தனர். (சரவணம் என்றால் தருப்பைக் காடு என்று பொருள். தாத்ரீவனம் என்றால் நெல்லிவனம் என்று

பொருள். நெல்லிவனத்தில் செய்த வழிபாட்டால் தருப்பை வனத்தையடைந்து ஷண்முகப் பெருமானுக்குப் பாலூட்டினர் என்பதில் இத்தலத்தில் வழிபடுபவர்களுக்கு முருகன் அருள் எளிதில் கிட்டும் என்ற புதை பொருள். நேயர்கள் ஆழ்ந்து சிந்தித்தற்குரியது).

இறைவனின் ஐந்து முகத்தோடு அதோமுகமும் சேர்ந்து அவ்வாறு முகங்களின் நெற்றிக்கண்களினின்றும் எழுந்த ஆறு பொரிகளையும் வாயுவும், அக்னியும் கொண்டேகிக் கங்கையிலிட அன்னவளும் அவற்றைச் சரவணத்தில் சேர்க்க அங்கு அப்பொரிகள் ஆறும் ஆறு குழந்தைகளாயின. அவற்றைக் கிருத்திகைப் பெண்கள் அறுவரும் ஆளுக்கொன்றாக எடுத்தவுடன் தமது மார்பில் பால் சுரக்கக்கண்டனர். திருவருளை வியந்து அக்குழவிகள் ஆறுக்கும் பாலூட்டினர். இவ்வாறு சந்திரனுக்கு ஏற்பட்ட சாபமும் பிசகாமல், கிருத்திகை மாதரின் கற்புக்கும் பங்கம் வராமல் பத்மகிரீசன் அருளால் தாய்மை நிலை அடைந்தனர்" என்று பிரம்மா அகத்திய முனிவருக்குச் சொன்னார்.

## 3-ம் அத்தியாயம்

## இறைவன் பத்மகிரியான வரலாறு

இவ்வரலாற்றைக் கேட்ட அகஸ்தியர் "பிதாமகரே முழுமுதற் கடவுளாகிய கயிலாயபதி இவ்வாறு இங்கு பர்வதாகாரமாய் எழுந்தருளியது எக்காரணத்தால்?" என்று வினவினார். பிரம்மா சொல்லத் தொடங்கினார்.

"குடமுனியே கேளும்! இவ்வுலக சிருஷ்டியின் ஆதியில் சத்திய லோகாதிபதியான "சாக்ஷுஸம்"[3] என்ற பிரம்மா ஒரு சமயம் சத்திய லோகத்தினின்றும் புறப்பட்டு கயிலையை நோக்கிச் சென்று கொண்டிருந்தார். போகும் வழியில் பகல் உச்சிப்பொழுது வந்துவிட்டது. உடனே தாம் அந்நேரத்தில் செய்யவேண்டிய "மாத்யான்ஹிகம்" என்ற கிரியைச் செய்யத் தீர்த்தம் எவ்விடம் இருக்கின்றது என்று தேடினார். அப்பொழுது மலர்ந்த செந்தாமரைகள் நிரம்பியதாயும், தெள்ளிய நீரையுடையதாகயும், துள்ளி விளையாடும் மீன் இனங்களையுடையதாயும், அழகாக நீந்தும் ராஜ ஹம்ஸங்களையுடையதாயுமான ஓர் தடாகத்தைக் கண்டார். மிக மகிழ்ச்சி கொண்டவராய்த் தடாகத்தில் இறங்கி ஸ்நானம் செய்து மான்யான்ஹிகக்கிரிகையை முடித்துக் கொண்டார்.

---

*[3] பிரம்மா என்ற சிருஷ்டிக்கர்த்தா ஒவ்வொரு கல்பத்தின் இறுதியிலும் ஊழியில் அழிந்து அடுத்த கல்பத்தில் திரும்பவும் தோன்றி சிருஷ்டி செய்வார் என்பது புராண வரலாறு. இவர் முதல் கல்பத்தில் மானஸர் என்றும், இரண்டாவது கல்பத்தில் சாக்ஷுஸர் என்றும், மூன்றாவது கல்பத்தில் வாசிகர் என்றும், நான்காவது கல்பத்தில் சுரோத்ரஜர் என்றும், ஐந்தாவது கல்பத்தில் தத்யர் என்றும், ஆறாவது கல்பத்தில் அண்டஜர் என்றும், ஏழாவது கல்பத்தில் பத்மஜர் என்றும் அழைக்கப்படுவார்கள். இப்பொழுது நடைபெறுவது சுவேதவராஹகல்பம், என்ற ஏழாவது கல்பம், பத்மஜர் அதாவது தாமரையில் உதித்தவர் என்பவரே இந்த கல்பத்தில் பிரம்ம பதவியில் இருக்கிறார். இவம்ர அகத்தியருக்கு இந்த புராதாணத்தைக் கூறுகிறார். எனக்குக் கிடைத்த தமிழ் கை எழுத்துப்பிரதியில் ஓர் இடத்தில் "சாசுஸ" பிரம்மா என்றும் மற்றோர் இடத்தில் "சஸ்ய பிரம்மா" என்றும் பிறிதோரிடத்தில் "காச்யப் பிரம்மா" என்றும் பலவாறு கண்டிருக்கிறது. சிருஷ்டி ஆரம்பம் எனப்படுவதால் இந்தச் சொற்கள் இரண்டாவது கல்பத்தின் பிரம்மாவான சாக்ஷுஸரையே குறிக்கும் என்று துணிந்து எழுதியுள்ளேன்.*

கதிரவனின் உஷ்ணம் தாங்காமல் சற்று இளைப்பாறினார். அந்த இடம் மிகக்குளிர்ந்ததாயும், இளம் காற்று அடிப்பதாயும், தடாகத்தில் முளைத்தெழுந்த தாமரை மலர்களின் வாசனையால் நிரப்பப்பட்டதாயும், மனோரம்யமாய் இருந்ததைக் கண்டு இந்த இடம் எதுவாயிருக்கலாம் என்று தனது ஞானதிருஷ்டியால் ஆராயப் புகுந்தார். இவ்வாறு புறக்கண்ணால் நோக்காது அகக்கண்ணால் பார்த்தபோது இது ஒரு மஹா மகிமை வாய்ந்த ஓர் புண்ணிய தீர்த்தம் என்றும், தம்மில் ஒரு முறையேனும் மூழ்கினவருக்கும் இகபர சௌக்யங்களை நல்க வல்லது என்றும் உணர்ந்தார். இறைவனின் திருவருளே நம்மை இங்கு கொண்டுவந்து சேர்த்தது என் நினைத்தவராய் கயிலைநாதனை இங்கேயே தரிசிப்போம் என்று தீர்மானித்து அவ்விடத்திலேயே தவம் செய்யத் தொடங்கினார்.

அவர் செய்த தவத்தில் மகிழ்ந்தவராய் முழு முதற் கடவுளான சிவபெருமான் அந்த தடாகத்தின் மத்தியில் மலர்ந்திருந்த ஆயிரம் இதழ்களையுடைய தாமரை மலரில் அதன் நடுவே இருந்த தாமரைக் காயினின்றும் திவ்ய தேஜோமயமான லிங்கமூர்த்தியாகத் தோன்றினார். அதனின்றும் ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமதேயம், சத்யோஜாதம் என்ற ஐந்து முகங்களோடும் ஒவ்வொரு முகத்திலும் ஸோம சூர்யாக்னிகளான மூன்று திருக்கண்களும், திங்களும் கங்கையும் தங்கும் ஜடாபாரமும் உடையவராய் ஆவிர்பவித்து தம்மை நோக்கிக் கடுந்தவம் செய்யும் பிரம்மாவுக்குக் காட்சியளித்தார். இந்த திவ்ய மங்கள மூர்த்தியைக் கண்ட பிரம்மா தமது கண்களில் ஆனந்தவாரி சொரிய மிக்க பரவசராகி இறைவனைத் தோத்திரம் செய்யவாரம்பித்தார்.

"ஆயிரம் இதழ்களைக் கொண்ட தாமரை மலரின் நடுவே தோன்றி ரத்ன ஸிம்ஹாசனத்தில் கோடி சூர்யப்பிரகாசமாய் லக்ஷ்மிபதி முதலிட்ட தேவர்கள் யாவரும் புடை சூழ்ந்து போற்றும் பரப்ரம்ஹமே! தொண்டருளம் கோயில் கொண்ட கருணாகர மூர்த்தியே! உம்மை வழிபடுவோரின் அஞ்ஞான இருளை அகற்றும் மங்கள மூர்த்தியே! உலகம் உய்ய இங்கு லிங்காகாரமாய் [4] எழுந்தருளிய முழுமுதலே! பற்றற்று நிற்கும் நிர்மல சொரூபியே! பக்தர்களுக்கு இஷ்டார்த்தசித்திகளைக் கொடுக்கும் கருணைமாமுகிலே! பராபரவஸ்துவே! நீங்கமற எங்கும் நிறைந்த செம்பொருளே! உலகத்தை ஆக்கி, அளித்துடைக்கும் மூவர்க்கும் முதல்காரணமே! உலகத்தையே தன் திருமேனியாகக் கொண்டு ஒன்றாயும், உடனாயும், வேறாயும் இருந்து இயக்கும் தனிமுதலே! அவரவர் வினைக்கீடாகத் தநு கரண புவன போகங்களை நல்கி, அவர்களின் பக்குவ நிலையறிந்து அவர்களை அனாதிகாலமாய்ப் பற்றியிருக்கும் பாசங்களைப்போக்க வன்றோ இன்று இங்கு இந்த பத்மதளகர்ணிகையில் லிங்க மூர்த்தியாய் ஆவிர்ப்பவித்தாய்! ஹே! புண்ணிய புருஷா! பொங்கும் நின்கருணைக்கடலின் அலைகளாகிற நாடக சாலையில் கூத்தாடும் அடியேனுடைய சித்தவிருத்திகள் யாவும் ஒடுங்கும் முடிவுக்கு முடிவே! உனது இன்னருளால் மாயாவசப்பட்ட மக்களை ஈடேற்ற இப்பத்மதீர்த்தத்தில் தோன்றியருளிய திகம்பர மூர்த்தியே!

---

*[4] லிங்கம் என்ற சொல்லின் விளக்கம்*

*"லிங்கம் பூதானி லயமஸ்மின் கச்சந்தீதி லிங்கம்" என்றும்*

*"லயம் கச்சந்தி பூதானி ஸம்ஹாரே நிகிலம் யத :*

*"ஸ்ருஷ்டிகாலே புனர்ஸ்ருஷ்டிம் தஸ்மாத் லிங்கமுதாஹ்ருதம்."*

*என்று ஸுப்ரபேதாகமம் கூறுகின்றது. அதாவது எதில் சகலமும் முடிவில் லயமடைகின்றதோ, பின்பு மறுபடியும் எதனின்றும் அவை யாவும் தோன்றுகின்றனவோ அதுவே லிங்கமாகும்.*

*"அந்தம் ஆதி என்மனார் புலவர்" சிவஞானபோதம்.*

பத்மவனத்தரசே! நெல்லிவனநாயகமே! உலகின் ஆதிகாரணனே! திங்களும கங்கையும் தங்கும் பிஞ்ஞகா! கந்தரா! சர்ப்பாபரணனே! சங்கரா! வேதஸ்வரூபனே! மெய்யனே! உபநிடதங்களின் உச்சியில் விரிந்த போதமே! ஆலகாலமுண்டு அமரர் உயிர்காத்த உத்தமா! தேவர் தொழும் பாதா! ஜோதியே! சுடரே! நித்தியனே! பூரணனே! பத்மா சலேசா! அபிராமாபதே! சரணம்! சரணம்!" என்று சாக்ஷாத் ஸ்ரீ பிரம்மாவானவர் மும்முறை வலம்வந்து, மும்முறை நமஸ்கரித்து இன்னும் பலவாறு போற்றிப்பரவி அதிவிநயஸம் பன்னராய் ஓர் விண்ணப்பம் செய்து கொண்டார்.

"ஸ்வாமி! தேவரீர் அடியேன்மீது கொண்ட பரம கருணையால் இன்று பத்ம கர்ணிகையில் லிங்கமூர்த்தியாய்க் காட்சியளித்தீர். உமது இந்த தேஜோமய சொரூபத்தை யாவரும் தரிசித்த மாத்திரத்தில் வினை நீங்கப் பெற்றவராய்த் திகழ ஏதுவாக, இந்த நெல்லிவன க்ஷேத்திரத்தில் இப்பொழுது பத்ம கர்ணிகையில் தோன்றிய உருவைப் பெரிதாக வளரச் செய்து கொள்ளல் வேண்டும் என்று பிரார்த்தித்தார். அதனைத் திருச்செவிமடுத்த பெம்மான் பிரம்மனின் பிரார்த்தனை உலக க்ஷேமத்திற்காக ஆகும் என்று திருவுளத்தில் கொண்டு அவ்வாறே வடக்கே கயிலாயம் எப்படியோ அப்படியே இத்தென் பிரதேசத்தில் தான் நித்யவாசம் பண்ணும் பர்வதமாக ஓங்கி வளர்ந்து நின்றார். தேவர்கள் புஷ்பமாரி பெய்தனர். திருமாலும் இந்திராதி தேவர்களும் அவனைத்தி இறைவனை அடிவணங்கித் துதித்தனர். "சம்புவே! சங்கரா! கௌரிமனோஹரா! கங்காதரா! பத்மா சலேசா! காமனை எரித்தவா! காலனை உதைத்தவா! கருணாகரா! பரஞ்சோதி! பரமபுருஷா! உலககாரணா! உரகாபரணா!" என்று பலவாறு வாயாரப்பாடி, மனதாரச் சிந்தித்து அடி வீழ்ந்து வணங்கினர்.

மேலும் கும்பமுனியே! கயிலாயவாசியாகிய பரமசிவனே, இந்நெல்லி வனத்தில், மஹாலிங்க மூர்த்தியாக எழுந்தருளிய பத்மகிரீசரை யாவர் தரிசித்து பக்திவிநயத்துடன் ஐம்புலனடக்கி ஆராதிக்கிறார்களோ அவர்கள் தர்மார்த்த காமமோக்ஷம் என்னும் சதுர்வித புருஷார்த்தங்களையும் அடைந்து இன்புறுகிறார்கள். இதில் சந்தேகமில்லை. விசேஷமாக ஸோம வாரத்திலும், பிரதோஷ தினங்களிலும், சதுர்தசியிலும் கிருத்திகை நக்ஷத்திரத்திலும், திருவாதிரை நக்ஷத்திரத்திலும், கிரஹண புண்ய காலங்களிலும், ஜன்ம நக்ஷத்திர தினங்களிலும் முறைப்படி வைகறையில் எழுந்து பத்ம தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து பத்மகிரியை வலம் வந்து. பத்மகிரீசரை சேவித்து வில்வம், துளசி, நெல்லி இலை இவைகளால் அர்ச்சனை செய்து வழிபட்டால் வேண்டியவர் வேண்டியவற்றை வேண்டியபடி அடைவர்.

இன்னும் ஸ்ரீய:பதியான மஹா விஷ்ணுவும் நரசிம்ஹாவதாரம் செய்து ஹிரண்யகசிபுவை சம்ஹாரம் செய்ததால் உண்டான பிரம்மஹத்தி தோசத்தை, இத்தலத்தில் வந்து பத்மகிரியனடியில் வதிந்து, பத்ம தீர்த்த ஸ்நானம் செய்து பத்மகிரிநாதரை வேதோக்தமாய்ப் பூஜை செய்து போக்கி கொண்டார். அவரும் இந்த க்ஷேத்ரத்தை வைகுண்டம் போலும், பாற்கடல் போலும் பாவித்து பத்மகிரியின் அடிவாரத்தில் அமர்ந்திருக்கிறார்." என்று நான்முகன் அகத்தியருக்குக் கூறினார்.

## 4-ம் அத்தியாயம்

# ஸூக்ஷ்மலிங்கத் தோற்றமும், திண்டீச்சுர நிர்மாணமும்.

முனிவரில் சிரேஷ்டரான அகஸ்திய முனிவர் பிரம்மனை நோக்கி "ஸ்ருஷ்டி கர்த்தாவே! இந்த பத்மகிரியின் சிகரத்தில் இன்னொரு லிங்க காரமான உருவம் இருக்கின்றதே அதன் விபரம் என்னவென்று கேட்டார்.

கமலஜர் கும்பஜருக்குக் கூறுகின்றனர். கேளும் லோபா முத்ரையின் கணவரே! இந்த பத்மகிரியே முழுமுதற்கடவுளின் சொரூபம். இது என் சிருஷ்டியில் அடங்கினதல்ல. இறைவனை தன்னிச்சையால் உயிர்கள் உய்யும் பொருட்டு இம்மலை வடிவான ஸ்வயம்பு மூர்த்தியாய் நிற்கின்றார். முன்பொரு சமயம் தேவாசுரயுத்தம் நடந்தது. தேவர்கள் படுதோல்வியடைந்தனர். தேவஸ்திரீகளை அரக்கர்கள் சிறைப்பிடித்து சென்றனர். இந்திரலோகத்தினின்றும் தேவர்கள் விரட்டப்பட்டனர். சொர்க்கலோகம் அசுர ஆட்சிக்குட்பட்டது. தேவர்கள் நாலாபக்கமும் சிதறியோடி ஆங்காங்கு ஒளிந்து கொண்டனர். அவர்களில் சிலர் இந்த பத்மகிரி பிரதேசத்தையடைந்து, லிங்காகாரமாய் இருக்கும் இப்பர்வதத்தின் தாழ்வரையில் நாள்தோறும் பத்ம தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து பத்மகிரி நாதரை வழிபட்டு வந்தனர். தொழுதவர் துன்பம் துடைக்கும் பத்மாசலேசர் அவர்கள் முன் தோன்றினார். அவர்கள் கோரிக்கை யாது என வினவினார். தேவர்கள் ஐயனே! அன்று எங்களை ஆலகால விஷச் சுவாலையிலிருந்து காப்பாற்றி பக்தரக்ஷகன் என்பதற்கு அறிகுறியாக உமது கண்டம் கருத்தது. அதுபோல இன்றும் எங்களை அசுரர்களின் உபாதியிலிருந்து நீக்கியருளும். மறுபடியும் நாங்கள் விண்ணுலகம் சென்று குடியேற அனுக்கிரகம் செய்தல் வேண்டும் என்று இறைஞ்சினர். அதனைக்கேட்ட பத்மாசலேசன் அவர்களை நோக்கி புன்னகை பூத்து தேவராயினும் மூவராயினும் நாம் செய்யும் வினைப்பயனை அனுபவித்தே ஆகவேண்டும். யாம் ஒருவனே கர்மத்தால் பீடிக்கப்படாதவன். விரைவில் உங்கள் அபீஷ்டம் நிறைவேறும். நமது அம்ஸங்களில் ஒன்றாகிய மஹாவிஷ்ணு அசுரர்களை அழிப்பார். அதுவரை உமக்கு சொர்க்க போகங்களை அனுபவிக்கும் நிலையில் இருப்பிடம் தருகின்றோம். கவலையுற வேண்டாம்" என்று திருவாய் மலர்ந்தருளி பத்மகிரியின் அகண்ட அடி பாகத்தை ஓர் பிலமாக (குகை) அமையும்படி செய்து, அதில் தேவர்கள் விண்ணுலகில் எவ்வாறு வாழ்ந்தார்களோ அதைவிட மிக சௌகரியமாய் வாழ்வதற்கான சகல வசதிகளையும் சங்கல்ப மாத்திரத்திலேயே உண்டாக்கினார். தேவர்களை அந்த குகையில் வசிக்க அனுமதி கொடுத்து விட்டுத்தான் இந்த அகண்ட அடிபாகத்தின் உச்சியில் மற்றொரு லிங்கமாக வளர்ந்தார். இந்த லிங்காகாரமான சிகரம் இறைவனின் சூக்ஷ்மலிங்கமாகும். தேவர்கள் மகிழ்ச்சியடைந்தனர். இந்த சூக்ஷ்மலிங்கத்தை நாடோறும் வழிபட்டுக்கொண்டு பத்மகிரியின் கர்ப்பம் போன்ற குகையில் சொர்க்காதி போகங்களையும் நுகர்ந்து வசித்தனர்.

இஃதிவ்வாறாக திண்டி என்ற ஓர் அசுரன் பத்மகிரிச் சாரலில் வேட்டையாடத் தன் பரிவாரங்களோடு வந்தான். அவன் அகண்டவாயும் கோரைப்பற்களும் ரத்தம் போல் சிவந்த கண்களும், சுருண்ட மீசையும், பருத்து நீண்ட கைகளும், குட்டையான கால்களும், அகன்ற மார்பும், செம்பட்டை மயிரும் மைமலை போன்ற உருவமும், இடி போல் குரலும் உடையவனாப் பார்ப்பவர் கண்டஞ்சும்படியான தோற்றமுடையவன். அவனைச் சூழ்ந்துவரும் அசுரகுழாம்

புலிக்கூட்டம் போன்று தோற்றமளித்தது. அக்கூட்டத்தின் நடுவில் திண்டிகாசூரன் புலிக்கூட்டத்தின் நடுவில் சிங்கமெனத் திகழ்ந்தான். அவனுடைய உடல் கட்டையும் வலிமையையும் திண்ணென்று இருந்தமையாலோ என்னவோ அவனை, "திண்டி" என்றே பெயரிட்டனர் அவன் பெற்றோர். வேட்டையாட வந்தவன் இந்த நெல்லிவனத்தின் வளப்பத்தையும் வனப்பையும் கண்டு சந்தோஷித்தவனாய் இவ்விடத்தில் ஓர் அழகிய நகரை நிர்மாணம் பண்ணி இங்கு வசிக்க வேண்டுமென அவாவினான். அவ்வாறே பத்மகிரியின் கீழ் பாகத்தில் உயர்ந்தோங்கிய சுற்று மதில்களும், வரிசை வரிசையாக வானளாவும் உப்பரிகைகளும், மாடமாளிகை கூட கோபுரங்களும், தெள்ளிய நீரையுடைய நீர்த்தேக்கங்களும், நவரத்னங்களும் தனதான்யங்களும் நிரம்பிய கடை வீதிகளும் பல்வகை மரங்களும், நறுமணம் கமழும் புஷ்பஜாதிகள் நிரம்பிய பற்பல செடிகொடி மரங்களையும், உத்யான வனங்களையும் உடைய்தாயும், ரத கஜ துரக பதாதிகளான நால்வகை சைனியங்களும், புஜபல பராக்ரமம் பொருந்திய பலசேனைத் தலைவர்களும், மல்லர்களும், மந்திரி பிரதானிகளும் ஒருங்கே கொண்ட ஓர் அழகிய நகரையும் உருவாக்கினான். அந்நகரத்துக்குத் திண்டீச்சுரம் எனப்பெயர் கொடுத்தான். பத்மகிரீசனை நித்தியம் வழிபாடு செய்து வந்தான். அவன் ஆட்சியில் அரசு மக்கள் அனைவரும் சுகமாகக் காலம் கழித்தனர்.

சிவபக்தனானாலும் "குலத்தளவேயாகுமாங் குணம்" என்ற மூதுரைக்கேற்ப, தனது அசுரகுண மேலீட்டால் சான்றோர்களான இருடிகளையும், வேதம் தெரிந்த அந்தணர்களையும், இறைவனின் அடியார்களை கொடுமைப்படுத்தியும், அடிமைப்படுத்தியும் வதைத்தும் தனது அசுர தர்மத்துக்கு ஒப்ப ராஜ்யபாரம் தாங்கினான்.

இவ்வாறு திண்டிமாசூரன், திண்டீச்சுரம் என்ற இந்நகரில் அரசு நடத்திவரும்போது, மகாவிஷ்ணுவானவர், தேவர்களின் முறையீட்டுக்குச் செவிசாய்த்து, தேவலோகத்தை ஆக்ரமித்திருந்த அசுரக் கூட்டத்தோடு கடும்போர் புரிந்து அவர்களை அழித்து தேவலோகத்தில் மறுபடியும் தேவர்கள் குடியேறும்படியான நிலைமையையுண்டாக்கினார். இதை அறிந்த பத்மகிரிநாதர் தம்மிடம் சரணம் புகுந்து பிலத்தில் வாசம் செய்து வந்த தேவர்களை அழைத்து "விஷ்ணுவால் அசுரர்குலம் அழிந்தது. நீங்கள் மறுபடியும் உங்கள் இருப்பிடம் சென்று அமைதியாய் வாழலாம்" என்று விடை கொடுத்தனுப்பினார். தேவர்களும் தாம் இதுவரை சொர்க்க போகங்களை விடப்பதின் மடங்கு அதிக இன்பம் அனுபவித்தவர்களாதலாலே பத்மகிரி பிலத்தையும் திருநெல்லிவனத்தையும் விட்டுப்பிரிய மனமில்லாதவர்களாய் மிகவருந்தினர். பின்பு இறைவனால் தேற்றப்பட்டு ஒருவாறு மனம் தேர்ந்தவர்களாய் பூலோக சொர்க்கமாக இருந்த குகையை விட்டு வெளியேறினர்.

அந்நிலையில் திண்டிமாசூரன் பிலத்துவாரத்தினின்றும் வெளிப்போந்த தேவர்களைக் கண்ணுற்றான். தேவர்களுக்கு அசுரர்களுக்கும் பரம்பரையாக ஒவ்வொரு கல்பத்திலும் ஏற்பட்டு வந்த விரோதம் அவர்களின் பிறவிக்குணமாக இருந்தபடியால் திண்டிமாசூரன் தனது படைகளுடன் தேவர்களைத் தாக்கமுற்பட்டான். எதிர்பாராதவகையில் ஏற்பட்ட இந்த ஆபத்தினின்றும் தப்புவதற்கு தேவர்கள் மறுபடியும் வந்த வழியே பிலத்தில் நுழைந்து ஓடி பத்மகிரி சிகரமாக இருக்கும் சூக்ஷ்மலிங்கத்தை வணங்கி "கருணைக்கடலே" யாதொரு பயமின்றி துன்பமின்றி இதுகாறும் இந்த பிலத்தில் பலகாலம் சொர்க்க போகங்களை அனுபவித்தோம். எங்களை மறுபடியும் விண்ணுலகுக்கேகச் சொன்னது இந்த திண்டிமாசூரன் கையில் சிக்குவதற்குத்தானா எங்களை இக்கணமே காப்பாற்றாவிடில் திண்டிமாசூரன் கையில் சிக்கி அல்லலுறுவோம் காப்பாற்றவேண்டும் என்று பன்முறை பத்மகிரீசன் தாள் பணிந்து இறைஞ்சினர்.

இவர்கள் முறையீட்டைக் கேட்ட பத்மாசலேசன், பவளமாமலையில் பனிபடர்ந்ததென்ன பால் வெண்ணீற்றை உத்தூளமாகத் தன் திருமேனியில் பூசியவராய், நெருப்புக் கற்றைகள் போல் ஒளிவீசும் நீண்ட சடையும், இடையில் கட்டிய புலித்தோலாடையும், மேலே போர்த்திய யானை உரியும் காதுகளில் குழையும் சுருள்தோடும் கலந்து தோன்ற, மார்பில் கபால மாலையணிந்து, பிரளயகாளாக்னிக்கு ஒப்பான கோபத்தால் சிவந்த திருநேத்ரங்களுடன் கையில் சூலப்படை தாங்கி கால பைரவர் உருவில் பத்மகிரி சிகரத்தினின்றும் ஆவிர்பவித்தார். தேவர்களுக்கு அபயம் கொடுத்து திண்டிமாசூரனோடு யுத்தம் செய்யப் புறப்பட்டார். அண்ட கடாகம் நடுங்கியது. பூமி அதிர்ந்தது. அவருடைய கோபச் சிரிப்பின் பேரொலி அண்டமெல்லாம் முட்டி எதிரொலித்தது. அஷ்ட குலாசலங்களும் அஷ்டதிக் கஜங்களும் அஷ்டதிக்குப் பாலகர்களும் ஊழியே வந்து விட்டதோ என்று அஞ்சி அதிசயித்தனர்.

இக்காலத்தில் தோன்றிய இறைவன் யுத்தசன்னத்தனாய் நிற்கும் திண்டிமாசூரன் முன் தோன்றி 'ஏ துஷ்டா! இப் புண்ணிய இடமாகிய நெல்லிவனத்தில் பலகால் வசித்தும், என்னை வழிபட்டுங்கூட உன் அசுரத்தன்மை உன்னை விட்டு நீங்கவில்லையே! அஹங்காரத்தால் உன் அறிவு மழுங்கியதே! இந்த க்ஷேத்ரத்தில் மூன்று தினங்கள் தங்கினாலே மும்மலங்களும் மறையுமே! ஆனால் வினை யாரை விட்டது ? சிஷ்டர்களை இம்சை செய்வதே உன் விளையாட்டாகக் கொண்டனை. நிராயுத பாணிகளாய் எம்மைச் சரண் புகுந்த தேவர்களை எதிர்த்தாய். இதோ உன்னை கொன்று விடுகிறேன் என்று இடிபோல் கர்ஜித்துத் தமது சூலப்படையைச் செலுத்தினார். திண்டிமாசூரனும் தனது ஆணவ முனைப்பினால் வந்தவர் பத்மகிரிநாதரே யென்றறியாமல் யுத்தம் செய்தான். பற்பல அஸ்திர சஸ்திரங்களை பிரயோகித்தான். தனது சேனா வீரரை ஏவினான். தனது முழுபலத்தையும் கொண்டு இடசாரி வலசாரியாகக் கடும்போர் புரிந்தான். ஆயினும் அவன் வெற்றியடையமுடியவில்லை. சற்று நிதானித்தான் நம்முடன் நின்று எதிர்க்கும் வல்லமை ஈசன் ஒருவருக்கேயுண்டு. இந்த வேட உருவை சாமான்யமாகக் கருதினேனே. வந்திருப்பவர் பத்மாசல இறைவனன்றோ எனத் தீர்மானித்துப் பேசலுற்றான்.

"ஹே கைலாஸபதே! பக்த ரக்ஷகா! நான் உன் நெல்லி வனத்தில் நகரம் நிர்மாணித்து, முப்போதும் உம்மை வழிபட்டு வந்த அடிமையல்லவோ ? தேவர்கள் போல் நானும் உம்மால் காப்பாற்றப்படத்தகுந்தவனே நீர் ஏன் பாரபக்ஷமாய் நடக்க வேண்டும் ? தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் இருக்கும் ஜன்மப் பகையை நீர் அறியீரா ? அன்று பாற்கடல் கடைந்த போது, ஏனைய தேவர்கள் பெரும் பொருள்களை அடைய உமக்கு விஷத்தைக் கொடுத்தனரே ? அவர்களைக் காப்பாற்றவா என்னைக் கொல்லக் கருதினீர் தேவர்கள் சூழ்ச்சியால் அமிர்தத்தில் எங்களுக்குப் பங்கு கொடாமல் ஏமாற்றினரே. அதிலிருந்தல்லவா இந்தப்பகை காலமெல்லாம் வளர்ந்து நீடித்திருக்கின்றது. தேவர்களைத் துன்புறுத்துவது என் குல தர்மமல்லவா ? என்னை ஏன் நீர் கொல்ல வேண்டும் ? இது உன் கருணைக்கு ஒத்த காரியமல்லவே. சிவபக்தனை சிவனே கொன்றான் என்ற பழி உம்மை விட்டகலுமா" ? என்று முதலைக் கண்ணீர் வடித்தான்.

ஆனால் பரமனோ அவரவர் வினைக்கீடாக அவரவர் வாழ்க்கையை அமைப்பவரல்லவா ? அந்த திண்டிமாசூரனின் பூர்வ ஜன்ம ரகசியத்தையும் அறிந்தவரல்லவா ? ஆதலால் அவனைத்தன் மறக்கருணையால் கொன்றே அவனை ஆட்கொள்ள வேண்டும் என்று நினைத்தவராய் திண்டிமாசூரனைப் பார்த்துச் சொல்லுகின்றார்.

"ஹோ துரத்மா! நீ இப்புண்ணியக்ஷேத்ரத்தில் வசித்தும், பத்ம தீர்த்தத்தில் நீராடி எம்மை வழிபட்டும் உன் வினை இன்னும் தீர்ந்தபாடில்லை. நோயால் வருந்தும் மதலைக்குக் கசப்பு மருந்தை அடித்தூட்டும் தாய்க்குக் கருணையில்லையென்று கூறமுடியுமா? துஷ்டமகனைச் சீர்திருத்தி நல்லவழியில் செலுத்த வளாரினால் அடித்தும் தீக்கோலால் சுட்டும் தண்டிக்கும் தகப்பனுக்குக் க்ருணையில்லையென்று சொல்லமுடியுமா! என்னை நீ வழிபட்டாலும், பிராமணர்களையும், சதாச்சாரமுடையவரையும், சான்றோரையும், தேவர்களையும் பல துன்பங்க்ளுக்கு ஆளாக்கினாய். எமக்குக் குற்றம் செய்வதை நாம் பொறுப்போம். ஆனால் எம்மை அண்டினவர்களுக்குத் தீங்கு செய்கின்றவர்களை எவ்வகையிலும் அழித்தே தீருவோம். சிவபக்தன் என்று சொல்லிக்கொண்டு சிஷ்டர்களுக்குத் தீங்கு செய்த பாணாசூரன், ஹிரண்யகசிபு, இராவணன் இவர்கள் கதைகளை நீ கேட்டதில்லையா? உன்னைக் கொல்வதும் எம் கடமையே. அதுவும் எம்கருணையில் பால்பட்டது தான். சிவபக்தன் என்று கூறிக்கொண்டு திருமாலை நிந்திப்பதும், திருமாலின் அடியாரைத் துன்புறுத்துவதும் திருமால் தாசர்கள் என்று கூறிக்கொண்டு சிவனடியார்களை இம்சிப்பதும் சிவநிந்தனை செய்வதும் பஞ்சமா பாதகங்கட்கும் பன்மடங்கு அதிகமான பாப செயலாகும். நீ சுத்த வீரனென்றால் யுத்தம் செய்துமடி" என்று கூறி மறுமுறை தமது சூலப்படையைச் செலுத்தினார். திண்டிமாசூரனும் தன்னாலியன்றவரை யுத்தம் செய்தான். அவன்சேனாவீரரும் சேனைகளும் அழிந்தன. முடிவில் அவனும் இறைவனின் மூவிலைச் சூலத்தை மார்பில் ஏற்று யுத்த களத்தில் குற்றுயிராய்ச் சாய்ந்தான். அவ்ன் உயிர் பிரியும் சமயம் பத்மகிரிநாதர் விருஷபாரூடராய் அபிராமாம்பிகையுடன் தன்சுய உருவில் காட்சி தந்தருளினார், "உனக்கு வேண்டும் வரம் யாது" எனவும் கேட்டார்.

"ஹே, பத்மாசலத்தினிடம் சுயம்பு மூர்த்தியாய், பர்வதாகாரமாய், தூலசூக்குமத்திருமேனியாய் எழுந்தருளியிருக்கும் மஹேச்வரா, உலககாரனா, உன்கருணையை என்னென்றெடுத்தோதுவது, உம்மால் தண்டிக்கப்பட்டவுடனே இருவினையொப்பும் மலபரிபாகமும் வந்தெய்தியதன் காரணமாக உன்னையும் என்னன்னை அபிராமாம்பிகையும் நேரில் காணும் வாய்ப்புப் பெற்றேன். இப்பேற்றை விடபெறுதற்குரியது வேறு யாதுளது? உன்மறக்கருணையால் என் வினைகளை நசிக்கச் செய்தாய், என் ஜன்மம் சாபல்யமடைந்தது நான் வேண்டுவது உன்திருப்பாத சேவையினின்று நீங்காத நிலையே, மேலும் என்னால் நிர்மாணிக்கப்பட்ட இந்நகரம் என்பெயரால் திண்டீச்சுரம் எனப் புகழோடு வழங்கட்டும். இப்பகுதியில் அபிராமாசமேதராய் நீர் எப்பொழுதும் நித்திய வாசம் பண்ண வேண்டும், இந்நகர் மாந்தர் யாவரும் இன்நகரில் வாழ்வதின் காரணமாகவே சிறந்த சிவனடியார்கள்ாய்த் திகந்து உன் அருளுக்குப் பாத்திரமாக வேண்டும். என்போன்று ஆணவத்தால் அட்டூழியம் செய்தவரேயாயினும் உன்திவ்ய தரிசனத்தால் பாபக்ஷயம் அடைந்து உமது கருணைக்கு இலக்காக இருக்க வேண்டும். என்னுடைய விருத்தாந்தந்தை கேட்பவர் படிப்பவர், சொல்பவர் யாவரும் உமது அடியார்களாகக் கருதி அவர்களுக்கு நீர் இகபர சாதனங்களை அருளுவீராக" என்று பிரார்த்தித்தான். இறைவன் 'அப்படியே ஆகுக' எனத் திருவாய் மலர்ந்தருளினார். திண்டிமாசூரனும் அபிராமாசமேத பத்மகிரீசரை சேவித்துக்கொண்டே இறைவன் திருவடி நிழலெய்தினன். தேவர்களும் தமக்கு வர இருந்த ஆபத்து நீங்கினவர்களாக மகிழ்வெய்தினார். கேட்டீரா கும்பமுனியே! இவ்வாறு பத்மகிரியை யார் இறைவனாகவே கருதுகின்றார்களோ, அதன் சிகரத்தை யார் இறைவனின் சூக்கும உருவமாக வழிபடுகின்றார்களோ அவர்களுடைய இஷ்டகாமியார்த்தங்கள் நிறைவேறப் பெற்றவராய் இம்மையில் சகலபோகங்களையும் அனுபவித்து மறுமையில் சொர்க்கம் சேருகின்றனர்.

திண்டிமாசூரனும் அவனுடைய கிளைகளும் அழிந்தபின், திண்டிமாபுரி அரசனற்றதாய் இருந்தது. தமக்கு அபயம் அளித்து இருக்கைதந்து திண்டிமாசூரனின் தாக்குதலினின்றும் காத்தருளிய பத்மகிரீசரது எல்லையற்ற கருணையை மனதில்கொண்டு பத்மகிரி நாதருக்கு விமரிசையாய் அபிஷேகாதி ஆராதனைகள் நடத்தி அவரது திருவுளச் சம்மதமறிந்து, அக்காலத்தில் கேரள தேசத்தில் அரசு செலுத்தி வந்தவனும், சிவபக்தியில் சிறந்தவனும் மனுநீதி தவறாமல் அரசியல் நடத்துபவனும், நல்லதர்மிஷ்டனுமான தர்மபாலன் என்ற அரசனை அழைத்து வந்து பத்மகிரி தரிசனம் செய்வித்து, அதன் மகிமைகளைத் தாம் அறிந்தவாறு சொல்லி அவனுக்கு முடிசூட்டி ராஜ்ய பாரத்தை அவனிடம் ஒப்படைத்துவிட்டு தேவர்கள் விண்ணுலகம் சென்றனர். தர்மபால மகிபனும் தனக்குக் கிடைத்த பேற்றை எண்ணித் திருவருளை வியந்து பத்மகிரியின் சிகரத்தில் அபிராமாம்பிகைக்கும் பத்மகிரீசருக்கும் ஆலயம் கட்டி ஆகமரீதியாய்க் கும்பாபிஷேகம் செய்து மகிழ்ந்தான்,'' என்று பிரம்மா சொன்னார்.

## 5-ம் அத்தியாயம்

# வார்த்துலாசுர சம்ஹாரமும் பொன்மான் சாபம் தீர்ந்ததும்.

இவ்வரலாற்றைக் கேட்ட அகஸ்தியர் பிரம்மனை விளித்து "ஹே கமலோத்பவா! பத்மகிரீசரின் சூக்ஷ்மலிங்கம் என்று தாங்கள் சொன்ன சிகரம், ஏனைய லிங்கங்கள் போல் இல்லாமல் மேற்கு திசையை நோக்கி இருப்பதின் காரணம் என்ன?'' என்று கேட்டார்.

கேளும் கும்பஜ! திண்டீச்சுரத்தில் அரசாண்டு வந்த தர்மபால மகிபன் மிகச்சிறந்த சிவபக்தன். சிவனடியாரை சிவனாகவே மதிக்கும் மாண்புடையவன். மன்னுயிரைத் தன்னுயிராகவே கருதிச் செங்கோல் நடத்தி வந்தான். அவன் செங்கோலின் மகிமையால் வானம் பொய்க்காது மாதம் மும்மாரி பெய்தது. நாடும் நகரமும் செழித்தோங்கின. எந்த இடத்தில் சிவபூஜையும், சிவத்தியானமும், சிவபத்தியும், சிறப்புற்று விளங்குகின்றனவோ அந்த இடம் சுபீக்ஷமாக இருப்பதில் வியப்பொன்றுமில்லை. தர்மபாலன் பத்மாசலேசன் மீது அளவற்ற காதல் கொண்டவனாய் நாடோறும் பத்மதீர்த்தத்தில் ஸ்நானம் செய்து, தூய ஆடை அணிந்து, திருநீரும் ருத்ராக்ஷமும் அணிந்து, பத்மகிரியை வலமாக வந்து, பத்மதீர்த்தத்தின் வடகரையில் இருக்கும் அச்வத்த விருக்ஷங்களை சேவித்து மலைமீது ஏறி பத்மகிரீசருக்கு அபிஷேக முதல் அர்ச்சனை வரை முறைப்படி செய்ய வேண்டிய ஆராதனைகளைச் செய்வித்து வழிபட்டு வந்தான். மேலும் அபிராமாம்பாளுக்கும், பத்மகிரீசருக்கும் உத்சவாதிகள் நடத்தி வந்தான். இறைவன் இறைவியின் அலங்கார அர்ச்சனைகளுக்காகவே நறுமணம் கமழும் பல ஜாதி புஷ்ப மரங்கள், செடிகள், கொடிகள் இவற்றை உண்டாக்கி வாழை, கமுகு, சந்தனம், மா, பலா, தென்னை முதலிய பல விருக்ஷஜாதிகளையும் வைத்து மிக அழகு பொருந்திய நந்தவனம் ஒன்றை பத்மகிரியின் தாழ்வரையில் நிர்மாணம் செய்து அதில் உண்டாகும் புஷ்பங்கள், பழங்கள் யாவும் பத்மகிரி யானுக்கே பயன்பட வேண்டும் என்று திட்டம் செய்து அநேக காவல்காரரையும், தோட்டவேலை செய்பவரையும், நியமித்து பரிபாலித்து வந்தான்.

நிற்க, குபேரனுடைய தலைநகரமாகின்ற அழகாபுரியிலே புஷ்பதந்தன் என்னும் பெயருடைய கந்தவர்மன் தனது மனைவியுடன் ஆகாய மார்க்கமாக சஞ்சாரம் செய்து கொண்டிருந்தபோது, பத்மகிரியையும் அதன் அடிவாரத்தில்

அமைந்த நந்தவனத்தையும் பார்த்தான். தன் மனைவியோடு கீழே இறங்கினான். நந்தவனத்தையும், வாபீகூப தடாகங்களையும் கண்ணுற்று நமது குபேரபுரியில்கூட இவ்வளவு அழகான நந்தவனம் இல்லையே என்ற சிந்தித்தவனாய் வனப்பு மிகுந்த தன் மனைவி சுமதியோடு நந்தவனத்தில் உல்லாசமாகப் பொழுது போக்கினான், மாலை மயங்கும்வேளை, அன்றிலும் தென்றலும் அவ்விருவரின் காம இச்சையைத் தூண்டிவிட்டன. தடாகத்தின் குளிர்ச்சியும், நறுமணம் வீசும் மலர்களும் அவர்கள் உடம்பில் சூடேற்றின. நந்தவனத்திலுள்ள பல ஜாதி மலர்களைப் பறித்தார்கள். அவற்றை மாலைகளாகவும் செண்டுகளாகவும் தொடுத்தார்கள் இருவரும் அணிந்து கொண்டனர். மலர்களையே படுக்கையாக ஓர் பளிங்கு மேடையில் பரப்பினர். இருவரும் ரதியும் மன்மதனும் போன்று கூடி மகிழ்ந்தனர். இந்த நந்தவனத்தை விட்டுச் செல்ல மனமிலராய் அங்கேயே தங்கி விட்டனர். கனிகளைப் பறித்து உண்டனர். இளநீரைப் பருகினர். தடாகங்களில் நீந்தி விளையாடினர். புஷ்பங்களைப் பறித்து செண்டுகள் கட்டி எறிந்து விளையாடினர், பக்ஷிகளின் இனியகுரலைக் கேட்டு மகிழ்ந்தனர், பாடினர், ஆடினர், இரவு வந்ததும் முன்போலவே மலர்ப்படுக்கை அமைத்து இன்பம் துய்த்தனர். கந்தவர்களாதலால் மானிடர் கண்ணுக்குப் புலப்படாமல் கரந்துறைந்தனர். இவ்வாறு அவர்கள் நெடுநாள் தங்கி விட்டனர். இவர்களது செயலால் பத்மகிரீசருக்கு அலங்கார அபிஷேக அர்ச்சனைகளுக்குரிய புஷ்பங்கள், பழவகைகள் குறைந்தன,

ஓர் இரவு பத்மகிரீசர் தர்மபாலனின் கனவில் தோன்றி "அரசனே! சில நாட்களாக எக்கும், இறைவிக்கும் சமர்ப்பிக்கப்படும் பழங்களும், புஷ்பங்களும் குறைந்து வருகின்றனவே. அதனை நீ கவனித்தாயா? நமது நந்தவனத்தைச் சரியாக பரிபாலனம் பண்ணத்தவறி விட்டாயா? திருடர்கள் வந்து பழங்களையும், புஷ்பங்களையும் களவாடிச் செல்கின்றனரா?" என்று கேட்டு விட்டு மறைந்தனர். அரசன் திடுக்கிட்டு எழுந்து மந்திரி பிரதானிகளை அழைத்துத் தான் கண்ட கனவைக்கூற இதன் காரணத்தை உடனடியாகக் கண்டுபிடிக்க வேண்டுமென்று கட்டளையிட்டான். மந்திரியும் நந்தவனக் காவல்காரரை விசாரித்தான். பல ஆயுதங்கள் தாங்கிய வீரர்கள் அடங்கிய ஒரு சிறு படையையே நந்தவனத்தை இராப்பகலாய் காக்கவேண்டுமென்று நியமனம் செய்தான். ஆனால் பயனொன்றும் காணமுடியவில்லை. காரணமும் அறியக்கூடியவில்லை. அரசன் மனம் வருந்தினான். அவனே ஓர் இரவு முழுவதும் தன் சேனா வீரரோடு நந்தவனத்தின் உள்ளும் புறமும் சுற்றி வந்தான். ஒன்றும் பயனளிக்கவில்லை. தானே சிவ அபராதம் செய்து விட்டதாகக் கருதிக் கொண்டான். உடைவாளை எடுத்துக்கொண்டு பத்மகிரி நாதரின் சந்நிதியை அடைந்தான். "கருணைக்கடலே! இது என்ன திருவிளையாட்டு, உம்மையே நம்பி, உம்மிடம் என் உடல் பொருள் ஆவி மூன்றையும் அர்ப்பணித்த எனக்கா இந்த சோதனை! என்னால் இயன்றவரை முயன்றும், பழவர்க்கங்களையும், புஷ்பங்களையும் திருடிச்செல்லும் கயுவனைக் கண்டுபிடிக்க இயலவில்லையே! அவன் என்ன மாயாவியோ மானிடர் கண்ணுக்குப் புலப்படாத வித்தியாதரனோ! அல்லது அடியேனுக்கு நீர் காட்டும் சோதனையோ? நான் என்ன தவறு செய்தேன். அபிராமாபதே! உன்னையல்லால் வேறு கதிதான் எனக்குண்டோ? எல்லாம் அறிந்த நீரே அக்கள்வனைப் பிடிக்க வேண்டுமேயன்றி என் போன்ற மானிரால் முடியாது. தாமே இம்மாயத் திருடனைக் கண்டுபிடித்துத்தர வேண்டும். இல்லையேல் உமது திருவடியிலேயே என் உயிரை மாய்த்துக் கொள்கிறேன்" என்று கண்களில் நீர்மல்க அஞ்சலி ஹஸ்தனாய் நின்று புலம்பி அழுதான்.

உடனே அரசனின் பக்திக்கு இரங்கி பத்மகிரீசன், கருத்த உடை தரித்து கச்சைமணியணிந்து, வாளேந்தி ஓர் காவலன் போல் அரசன் முன் தோன்றினான். தான் அக்கள்வனை அன்றிரவே பிடிப்பதாகக் கூறினான்.

நந்தவனத்தையடைந்தான். மானிடர் கண்ணுக்குத் தென்படாமல், இறைவனுக்கு அர்ப்பணிக்கப்பட்ட நந்தவனத்தை தன் லீலைகளுக்குரிய உத்யானவனமாக்கிக்கொண்ட புஷ்பதந்தன் என்ற கந்தர்வனை கயிறுகொண்டு கட்டி இழுத்து வந்து "அடே துராத்மா, எமது அர்ச்சனைக்குரிய புஷ்பங்களைத் திருடி உன் கேளிக்கைகளுக்குப் பயன்படுத்திக் கொண்டாயல்லவா, கந்தர்வனாகப் பிறந்தும் நீசன் போல் திருடினாய், நீ செய்தது சிவ அபராதம். அதையும் பன்முறை செய்தாய்" என்று அதட்டினார். புஷ்பதந்தனுக்கு சுய அறிவு வந்தது, இதுவரை காமாந்தகாரத்தில் மூழ்கி அடாது செய்ததை உணர்ந்தான். தன்னைக்காட்டி இழுத்து வந்தவர் பத்மாசலேசர் என்பதையும் அறிந்தான். அடிவீழ்ந்து தான் செய்த சிவ அபராதத்தை மன்னித்தருளும்படி இறைஞ்சினான். இறைவன் அவனை நோக்கி!"அடே! அவரவர் செய்த வினையின் பயனை அனுபவித்தே ஆகவேண்டும் என்பது நியதி. அந்த நியதியால் தான் உலகம் நடந்து கொண்டிருக்கின்றது. மானிடரிலும் உயர்ந்த பிறவியாகிய கந்தர்வனாகப் பிறந்தும் அரக்கன்போல் கரந்துறைந்து திருடி காமவேறி பிடித்து எம் நந்தவனத்தைப் பாழாக்கினாய். ஆகையால் நீ ராக்ஷஸனாக [5] வர்த்துலாகார உருக்கொண்டு கானகங்களில் அலைவாயாக என்று சாபமிட்டனர். இதனைக்கேட்ட கந்தர்வன் இடியோசை கேட்ட சர்ப்பம்போல் நடுங்கி மனம் கலங்கி பன்முறை பத்மகிரி நாதரின் பாதங்களில் வீழ்ந்து வணங்கித் தான் சாபநிவர்த்திக்கு ஹேது என்னவென்று விண்ணப்பத்தான். அப்பொழுது முக்காலமுணர்ந்த முக்கண்ணன் பின்னால் நடக்க இருக்கும் விஷயங்களையறிந்து "ஹே புஷ்பதந்தா! உனக்கு இட்ட சாபம் பிற்காலத்தில் உலக க்ஷேமத்திற்காகவே பலனளிக்கக் கூடியதாய் இருக்கிறது. உன்னுடைய பூர்வ ஜன்ம வினையே உன்னை இங்கு இழுத்து வந்து சேர்த்தது. ஆகையால் நீ ராக்ஷஸ உருக்கொண்டு வர்த்துல ராக்ஷஸன் எனப்பெயர் பூண்டு பத்மகிரிக்கு மேற்குத் திசையில் இருக்கும் வராஹகிரி என்ற மலைப் பிரதேசத்தில் திரிந்து அநேக ஆண்டுகள் ஆனபின் ஓர் பொன்மானைத் துரத்திக்கொண்டு கிழக்கே ஓடி வருவாய்,. அம்மான் கும்பநதிக்கரையில் எம்மைச் சரணடையும். அப்போது நாமே வந்து உன்னைக்கொன்று உன் சுய ரூபத்தைக் கொடுப்போம்' என்று கூறி மறைந்தார்.

கேட்டீரா கும்ப முனியே! இறைவனுக்காக அர்ப்பணிக்கப்படும் எந்தபொருளையும், இறைவனுக்குப் பயன்படுமுன் எவன் திருடி சொந்த உபயோகத்திற்கு வைத்துக் கொள்கிறானோ அவனுக்கு இந்த கதியே நேரும். ஆலயங்களில் கடவுளுக்கென்று அடியார்களால் கொண்டு வரப்படும் தனம், தான்யம், எண்ணெய், புஷ்பம் இவற்றைத் திருடுவது மஹாக் கொடிய பாபம் என்பதை உலகத்தார் புஷ்பதந்தன் வரலாற்றிலிருந்து அறிந்து கொள்ளவேண்டும் என்றே பரம கருணாகர மூர்த்தியான அபிராமா வல்லபன் இத்திருவிளையாட்டை நடத்தினார்.

அவ்வாறே புஷ்பதந்தன் உடனுக்குண்டான வர்த்துல உருக்கொண்ட ஓர் அரக்க உருவமடைந்தான். பார்ப்பதற்கே அருவருப்பான தோற்றமும் பருத்து உருண்டமேனியும், மைமலை போன்ற கருப்பு நிறமும் கொண்டவனாக அங்கிருந்து வராஹகிரி என்ற பன்றிமலைச் சாரலையடைந்தான். அக்காட்டில் வசித்த காட்டுப்பன்றி காட்டெருமை முதலியவற்றைக் கொன்று தின்றுகொண்டு திரிந்தான். மேலும் அப்பன்றிமலையில் அதற்குமுன் குடியேறியிருந்த வித்யுன்முகன் என்ற அரக்கனையும் கொன்று அவனுடைய ஸ்திரீகளை வலிய அணைந்து கூடிக்காலம் கழித்தான்.

[5] உருண்டையான வடிவம்.

இஃத்திவ்வாறாக முற்பிறவியில் செய்த புண்ணியத்தால் வேதியர் குலத்தில் பிறந்து நான்கு வேதம் ஆறு சாஸ்திரம் பதினெண் புராணம், இதிஹாசம், நையாயிகம், மீமாம்ஸை முதலிய சகலமும் நன்கு கற்றவனான ஓர் அந்தணன் இருந்தான். அவன் பெயர் சுமேதன். வித்தைகளைப் பெற்றானே ஒழிய அவற்றின் பயனறிந்து நடக்கவில்லை. பேராசை என்னும் பேய்வாய்ப்பட்டுப் பொன் தேடுவதிலேயே தன் முழுக்கவனத்தையும் செலுத்தினான். தான் கற்ற வித்தைகளைப் பொன்னுக்கு விற்றும் தானம் வாங்கியும் பொன்னைச் சேர்த்தான். தான் கற்ற வித்தையை அருகதையுடைய சீடருக்கு வித்யாதானம் பண்ணாத பிராமணன் பிரம்ம ராக்ஷஸனாகப் பிறப்பான் என்ற நீதி சாஸ்த்ர விதியை மறந்தான். எவ்வழியில் பொன் தேடலாம் என்ற ஆலோசனையிலேயே தனது காலத்தைக் கழித்தான். ஒரு சமயம் விஷ்வாமித்ரர் யாகம் செய்கிறார் என்று வேள்வியுற்றுத் தானும் அங்கு சென்றான். விஷ்வ மித்ரரை அணுகி "சுவாமீ! நானும் ஓர் வேள்வி செய்ய அவாக் கொண்டுள்ளேன். அதற்கு வேண்டிய பொருளை அடியேனுக்குக் கொடுத்தருள வேண்டும்" என்று பிரார்த்தித்தான். விஷ்வ மித்ரர் மஹா ஞானியாதலால் இந்தப் பேராசை பிடித்த பிராம்மணனின் உள்ளக்கிடக்கையை நன்கறிந்து அடே! அந்தணர் குலத்தில் பிறந்தும், பொன்னுக்காகப் பொய் சொல்பவன் வேதியனாயினும் நீசனேயன்றே! பிறப்பினாலும் படிப்பினாலும் பிராமணன் என்ற பெயர் சித்திக்காது. ஆசையற்றவனாய், ஐம்புல அடக்கமுள்ளவனாய் வித்யா கர்வம் சிறிதுமில்லாதவனாய், வித்வான்களைக் கண்டு பொறாமை கொள்ளாது அவர்களை மதிப்புடன் உபசரிக்கின்றவனாய், அகம்பாவம் அற்றவனாய் ஆசார சீலனாய், பொன்னுக்காகக் கற்ற வித்தையை விற்காதவனாய், வருணாச்ர ம தர்மம் வழுவாதவனாய் இருப்பவனையன்றோ அந்தணன் என்று சொல்லத்தகும்! ப்ரம்ஹ சாக்ஷாத் காரத்தையறிந்து சகல வஸ்த்துக்களிலும் இறைவனைக் காண்பவன்றோ பிராமணன்! வித்யா விநய சம்பன்னனானவன் பசுவினிடத்தும், யானையிடத்தும், நாயினிடத்தும் அந் நாயைத் தின்னும் புலையனிடத்தும் ஸம நோக்குடையனாக இருப்பான். இவனையன்றோ "ப்ரம்மவித்" என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. செய்கைகளனைத்தும் பிரம்மத்திடம் சார்த்திவிட்டு அகப்பற்றுப் புறப்பற்றுகளை அகற்றி எவன் சத்கர்மாக்களைச் செய்கின்றானோ அவனே பிராம்மணன் என்ற பெயருக்குத் தகுதியுடையன். அந்தணன் என்போன் அறவோன். அவன் மற்றெவ்வுயிருக்கும் செந்தண்மை பூண்டு ஒழுகுவன், அஃதயன்றி உன்போன்று பிறப்பால் வேதியனாயும், சகல சாஸ்திரபண்டிதனாயும், இருந்தபோதிலும் தன் குல தர்மத்தை விட்டுப் பொன் தேடுவதில் ஈடுபட்டு அதற்காகப் பொய் சொல்லவும் துணிந்தவன் மனிதரில் கடையன். அவனுடைய கல்வித் திறனுக்கு மதிப்புக் கொடுக்கப்பட மாட்டாது. அவனையாவரும் வெறுப்பர். அன்று மாயமானாய் வந்து இராமனை ஏமாற்றிய மாரீசன்போல் இன்று நீ பிராம்மண உருவில் வந்து பொய் சொல்லிப் பொருளீட்ட வந்தாய். நீ கேட்ட பொன்னுக்குப் பதிலாய் உன் உருவமே பொன்னுருவாகட்டும். துள்ளி ஓடும் மனதை அடக்கச் சக்தியற்றவனாய் இருப்பதால் பொன்மான் உருக்கொள்வாயாக" என்று அவனை சபித்தார். இச்சாபத்தைக் கேட்ட சுமேதன் வெட்கத்தால் தலைகுனிந்து பயத்தால் உடல் நடுங்கி, ஐயோ நாம் கற்ற கல்வியெல்லாம் வீணானதே என்று மனதில் சிந்தித்து விஸ்வாமித்ரரின் காலடியில் வீழ்ந்து இரு கால்களையும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, "தவ சிரேஷ்டரே! அடியேன் செய்த அபசாரத்தைப் பொருத்தருளும்" என்று கண்ணீரால் அவர் பாதங்களைக் கழுவினான். திரிகால ஞானியாகிய விஸ்வாமித்ரர் தான் கொடுத்த சாபத்தின் தன்மையையும், முன்பு பத்மகிரி நாதரால் புஷ்பதந்தனுக்குக் கொடுத்த சாபத்தையும் தனது ஞானதிருஷ்டியால்

உணர்ந்தார். இதுவும் கயிலாயபதியின் திருவிளையாட்டேயென்று கண்டார். இவ்விரு சாபங்களால் இவ்விருவருக்கும் நேரப் போகும் விமோசனங்களை அறிந்தார். அவ்வந்தணனைப் பார்த்துக் கூறுகின்றார். "ஹே! சுமேதா! நீ இவ்விடத்தை விட்டகன்று பொன்மான் உருக்கொண்டு தக்ஷிண பிரதேசம் செல்வாய். வழியில் பல சிவஸ்தலங்களை அடைவாய் முடிவில் கயிலாயபதியான உமா மஹேச்வரன் சுயம்புலிங்க மூர்த்தியாக பத்மகிரி நாதர் என்ற திரு நாமம் ஏற்று பர்வதகாரமாய் நிற்கும் தாத்ரீ வனத்தை அடைந்து, பத்மகிரியின் மேற்கேயிருக்கும் பன்றிமலைப் பிரதேசத்தில் இருக்கும்போது ஒரு அரக்கன் உன்னைத்துரத்த அவன் அம்புக்குத்தப்பி ஒடி பத்மகிரியை தரிசித்தவுடன் உன் பூர்வோத்திரம் நினைவுக்கு வரும். நீ பத்மசலேசனைச் சரண்புகுவாய். அப்பொழுது உனக்கு சாப விமோசனமாகும் என்று கூறினார்.

அவ்வாறு கூறி முடிப்பதற்குமுன் அந்தணனின் உடல் பொன்மான் உருவாயது. அங்கிருந்து புறப்பட்டு தெற்கு நோக்கி வந்தது. வழியில் மத்யார்ச்சனம், பஞ்சநதம், கயாரோகணம், ஜம்புகேச்வரம் முதலிய பல புண்ணிய க்ஷேத்ரங்களைத் தரிசித்து, பசும்புற்றரையில் மேய்ந்து பல புண்ணிய தீர்த்தங்களைப் பருகியது. இவ்வாறு யாதொரு இடையூறுமின்றி தாத்ரீவனத்தின் கீழ்ப்பகுதியில் இருக்கும் கோவிலூர் என்ற இடத்தை அடைந்து அங்கிருந்து "தாளவனம்" [6] என்ற தலத்தில் வந்து சேர்ந்தது. அங்கிருந்து கும்பநதிக் (குடவனாறு) கரையோரமாகவே சென்று கும்பநதியின் உற்பத்திஸ்தானமான பன்றிமலைச் சாரலையடைந்து அதைவர்த்துல ராக்ஷஸன் பார்த்து விட்டான். இருவரின் சாப விமோசன காலம் நெருங்கி விட்டது. பொன்மானின் அழகைக்கண்டு மயங்கி அதனைக் கொல்லாமல் உயிரோடு பிடித்து தன் போகஸ்திரீகளிடம் கொடுத்து விளையாட வேண்டும் என்று எண்ணினவனாய் அம்மானைப் பிடிக்க முயன்றான். மான் அவன் கைக்குக் கிட்டவில்லை. அன்று மாரீசன் இராமரை இழுத்துச் சென்றது போல இப் பொன்மானும் வர்த்துலனை பன்றிமலைச்சாரலை விட்டு நெடுந்தூரம் கிழக்கே இழுத்து வந்தது. அதிக தூரம் ஒடி வந்ததாலும் மான் கைக்குக் கிட்டாத ஏமாற்றத்தாலும் வர்த்துலன் சீற்றம் கொண்டான். அதனைக் கொல்ல நினைத்து வில்லை நாணேற்றி அம்பு தொடுத்தான். அதற்குள் அம்மான் கும்பநதியைத் தாண்டிக் கிழக்குக் கரை ஏறியது. அங்கிருந்து நிமிர்ந்து பார்த்தபோது சற்று தூரத்தில் பத்மகிரியின் சிகரம் அதன் கண்களில் பட்டது. அதேசமயம் வர்த்துலன் தொடுத்த அம்பும் அதன் உடம்பில் பாய்ந்தது. முன்பு விஸ்வாமித்திரர் கூறிய வண்ணம் தன் சுய உணர்வு வந்து "ஹே! பத்மகிரி வாஸா! தாத்ரீவனேச! அபிராமநேசா! அபயம்! அபயம்! என்று கதறிக் கொண்டே கீழே விழுந்தது.

இந்த அபயக்குரல் பத்மாசலேசன் திருச்செவிகளில் புக கிரியின் சிகரமான சூக்ஷுமலிங்கம் அத்தொனி வந்த திக்கை நோக்கித் திரும்பியது. அந்தலிங்கத் திருமேனியினின்றும் ஓர் வேட உருவமாய் பத்மகிரிநாதர் தோன்றி ஒரு நொடியில் மான் விழுந்த இடம் சேர்ந்தார். அம்மானைப் பிடிக்க ஒடி வந்த வர்த்துலன் மீது பாணப்பிரயோகம் செய்தார். அது அவன் மார்பில் தைத்து ஊடுருவிச் சென்றது. அதோடு அவன் உயிரையும் வாங்கியது. வர்த்துலன் மடிந்தும் அவன் சரீரத்தினின்றும் மிக அழகு வாய்ந்த நீங்கா யௌவனமுள்ள

---

*[6] தாளவனம்' என்றால் பனங்காடு என்று பொருள். அது விஜயநகர ஆட்சி காலத்தில் தெலுங்கில் 'தாடிகும்பு' என்று வழங்கியது. தாடிகும்பு என்றாலும் பனமரக்கூட்டம் என்று தான் பொருள். இதுவே இப்பொழுது தாடிக்கொம்பு என்று அழைக்கப்படுகிறது. தாடிகும்பு என்ற பெயரே தாடிக்கொம்பு என மருவியது. ஆங்கில ஆட்சி இந்த பிரதேசத்தில் துவங்கிய போது*

புஷ்பதந்தன் வெளிப்பட்டான். பத்மகிரி நாதரை வணங்கினான். தான் சாபவிமோசன மடைந்ததற்கு மகிழ்ந்தான். ஆடிப்பாடி இறைவனைப் பல நாமாக்களால் தோத்தரித்தான். "ஐயனே! மெய்யனே! என்னை ஆட்கொண்ட முக்கண்ணப்பனே! மூன்று உலகங்களுக்கும் ஆதியும் அந்தமுமான பரம் பொருளே! அபிராமாம்பிகையின் கண்களான வண்டுகள் எப்பொழுதும் பார்த்துக்களிக்கும் பத்மம் போன்ற முகமுடையவரே! அந்த பத்மத்தில் ஊறும் கருணையாகிற தேனையுண்டு களிக்கும் அடியாரின் உள்ளத்தைக் கோயிலாகக் கொண்டவரே! பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் என்ற மும்மூர்த்திகளின் முதலே! ஆதியந்தமில்லா பரஞ்சோதியே! பரமபுருஷா! பத்மத்தில் ஆவிர் பவித்தவரே! லிங்கா காரமான பர்வதரூபமாய் யாவரும் தரிசிக்க எளிதாய் மேருவுக்குச் சமமாய் நிற்பவரே! ஆயிரம் நாப்படைத்த ஆதிசேஷனாலும் பகரவொண்ணா திவ்ய தேஜோமய ஸௌந்தர்யத்தை அடியேன் எப்படி வர்ணிக்க முடியும்? ஈசா! நினது திருவருளால் என் சாப விமோசனமாகிப் பழைய உருக்கொண்டு நிற்கிறேன். இனி என்றும் உன்தியானம் என் மனதை விட்டகலாமல் இருக்க வரம் தாரும். சிவ அபராதம் செய்கிறவர்கள் சிவன் சொத்தைத் திருடுகிறவர்கள் என் வரலாற்றைக் கேட்டுத் திருந்தி உன் அருளுக்குப் பாத்திரமாகட்டும்" என்று வேண்டினான்.

அதே சமயம் வேட உருவிலிருந்த பத்மகிரீசர் அம்புபட்டுத் துடிக்கும் பொன்மானின் மேனியைத் தடவி பாய்ந்திருந்த அம்பை வாங்கினார். உடனே அம்மான் உருவம் மாறி சுமேதன் என்ற அந்தணனாகி நின்றான். பத்மகிரிநாதன் சரணாவிந்தங்களில் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து பலவாறு துதித்தான். முடிவில் இறைவா! வேதம் ஓதியும், சகலகலைகளை கற்றும், பிராமாணகுலத்தில் பிறந்தும், பொன்னாசையென்றும் பேயால் அலைக்கப்பட்டுப் பல இழி தொழில்கள் புரிந்தேன். விஸ்வாமித்திரரால் பொன்மானாக சபிக்கப்பட்டு இன்று உம் தரிசனத்தாலும், ஸ்பரிசத்தாலும் சாபநீக்கமடைந்து உம்மை நேரில் தரிசிக்கும் பாக்கியமும் பெற்றேன். நானே தன்யன் என்னைப் பிடித்திருந்த பேராசையும் என்னை விட்டோடியது. இனி எக்காலத்திலும் உன் திருநாமத்தை உச்சரிப்பதிலும் உன் புகழைப் பிறர் கேட்கச் சொல்லுவதிலும், உன் சந்நிதியில் வேதபாராயணம் செய்வதிலும் விரும்பிக் கேட்பவர்களுக்கு வேத அத்தியாயனம் செய்து வைப்பதிலும் என் காலத்தைக் கடத்தவும் முடிவில் நான் உன் திருவடியில் சேர்ந்து உன்னைவிட்டு நீங்காத ஸாயுஜ்யபதவியைத் தந்தருள வேண்டும். மேலும் எந்த கும்ப நதிக்கரையில் என்னை ஆட்கொண்டீரோ அந்த இடம் இந்நிகழ்ச்சியின் ஞாபகார்த்தமாகக் "பொன்மான்துறை" என்று பிரசித்தி அடையட்டும். எவனொருவன் இத்துறையில் நீராடுகிறானோ அவனுடைய சகல பாபங்களும் நசித்துவிடவும் அவனுக்கு உன்அருள் என்றும் இருக்கும் படியும் வரம் தரல் வேண்டும்" என்று பிரார்த்தித்தான். "அவ்வாறே ஆகுக" என இறைவன் திருவாய் மலர்ந்தருளினார். புஷ்பதந்தன் பத்மகிரிநாதரை வணங்கி "சுவாமீ, பொன்மானின் அபயகுரல் கேட்டு மேற்குமுகமாகத் திரும்பிப்பார்த்தீர்கள் அல்லவா, அதுவன்றோ என் சாபவிமேசனத்திற்குக் காரணமாக இருந்தது. ஆகவே பத்மகிரிச் சிகரமான உம்முடைய சூக்ஷுமலிங்கம் இன்றிலிருந்து மேற்கே திரும்பியதாகவே அமர்ந்து தம்மை வழிபடும் அடியவர்களுக்கு வேண்டிய நலன்களை அளித்தருள வேண்டும்" என்று வேண்டிக்கொண்டான். இறைவனும் "அவ்வாறே ஆகுக" எனக்கூறி, தனது வேடரூபத்தைக் கரந்து சூக்ஷுமலிங்கத்தில் மறைந்தார். கேட்டீரா கும்பசம்பவா அன்னாள் முதல் பத்மகிரியின் சிகரம் மேற்கு நோக்கியே இருக்கின்றது என்று நான்முகன் அகத்தியருக்குச் சொன்னார்.

## 6-ம் அத்தியாயம்

# அனாலாக்ஷன் திண்டீச்சுரத்தின் மீது படை எடுத்த வரலாறு

அகஸ்த்திய முனிவர் சதுர் முகனை நோக்கி பிதாமகரே! இதுவரை என் ஐயன் பத்மகிரீசரைப்பற்றிக் கூறியவைகளைக் கேட்டு கிருதார்த்தனானேன். இன்னும் பத்மாசலேசரின் தேவியாகிய அபிராமாம்பிகையைப் பற்றிக்கேட்க ஆவலுள்ளவனாக இருக்கின்றேன். சக்தியின்றேல் சிவமில்லை சிவமின்றேல் சக்தியில்லை என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. மேலும் உலகத்தில் நான் அறிந்த வரையில் பதினெட்டு [7] சக்திபீடங்கள் இருக்கின்றன. இவையிருக்க இந்த பத்மாசலேக்ஷேத்ரத்தில் அபிராமாபீடம் என்று எவ்விதம் வந்தது. அதன் வீவரத்தை அடியேனுக்கு உபதேசித்தருளல் வேண்டும் என்று வேண்டிக் கொண்டார். பிரம்மாவும் அகஸ்தியரை நோக்கிப் புன்னகை பூத்து "ஹே! கும்பஜ! நீர் கேட்ட கேள்வி உலக க்ஷேமத்தின் பொருட்டாகும். ஆனால் அதில் அடங்கிய தத்துவம் பரம ரஹஸ்யமானது. அதையும் சொல்லுகிறேன் ஏகாக்ரமாய்க் கேட்பீராக :

பத்மகிரி ரூபமாய் அமர்ந்திருக்கும் இம்மஹாலிங்கமே நீர் சொன்ன பதினெண் சக்திகட்கும் (யோனி) பிறப்பிடமாகும். பத்மதீர்த்தத்தின் நடுவில் பத்ம கர்ணிகையில் பத்மகிரிநாதர் தோன்றிய காலத்திலேயே அவனுடைய பாகம்பிரியாளாகிய பராசக்தி அவனுடையனே ஒன்றியிருந்தாள். பர்வதா காரமாக இறைவன் வளர்ந்தபோதும் அவள் அவனுள் ஒடுங்கியிருந்தாள். அவள் ஆவிர்பவித்த வரலாற்றைக் கூறுகிறேன். கேளும்.

மேலாழி நாப்பண் குசத்வீபத்தில் ஜ்யோதிஷ்மதி என்ற நகர் உண்டு. அதனருகில் சித்திரிகாவனம் என்ற ஓர் நந்தவனம் இருந்தது. அந்த நகரத்தின் அழகுக்கு குபேரபட்டணத்தையும், இந்திராபுரியையும் கூட ஈடு கட்ட முடியாது. இந்நகரில் ரக்தபீஜன் என்ற அரக்கனின் பேரனும், வித்யதக்ஷன் என்பவனின் புத்ரனுமான அனலாக்ஷன் என்ற ஓர் அசுர அரசன் ராஜ்யபரிபாலனம் பண்ணி வந்தான். அவன் அதிபராக்ரமசாலி அவன் சிவபெருமானைக் குறித்துத் தவம் செய்தான். அதன் பலனாக தேவர்களாலும், மூவர்களாலும் கூட வெல்லப்படாத மகத்தான வரத்தைப் பெற்றான். மேலும் தனக்கு நூறு தலைகளும், இருநூறு கைகளும் உண்டாக வேண்டுமென்றும் வரம் பெற்றான். இதனால் செருக்கு ஓங்கியவனாக தேவர்களை இம்சை செய்யத் தொடங்கினான். தேவர்களை ஏவல் கொண்டான்.

---

*[7] இப்பதினெட்டு சக்தி பீடங்களின் விவரம் :*

*1. சாங்காரீபீடம் இலங்கையிலும். 2. சிம்ஹகாபீடம் சிங்களத் தீவிலும். 3. மாணிகாபீடம் தக்ஷவாடியிலும். 4. சூகலாபீடம் பேடாபுரியிலும். 5. பிரமதாபீடம் ஸ்ரீசைலத்திலும். 6. விஜயாபீடம் விஜயபுரியிலும், 7. மஹாலக்ஷ்மிபீடம் கொல்லாபுரியிலும், 8. காமாக்ஷீபீடம் காஞ்சியிலும். 9. சுகுசாநந்தாபீடம் சாளக்ராமத்திலும். 10. விகசயனபீடம் ஒட்டாணத்திலும், 11. பத்ரேச்வரீபீடம் இமயகிரியிலும் 12. புனாஎலாபீடம் மங்களபுரியிலும், 13. மஹாகாளிபீடம் உஜ்ஜினியிலும், 14. விந்தியவாஸினிபீடம் விந்தியமலையிலும், 15. மஹாயோகினிபீடம் அஹிச்சித்ரம் என்ற இடத்திலும், 16. கன்னிகாபீடம் கன்னியாகுமரியிலும், 17. விசாலாக்ஷீபீடம் காசியிலும், 18. சரஸ்வதிபீடம் காஷ்மீரத்திலும் இருப்பதாக இப்புராணம் கூறுகின்றது. இவற்றில் சில இடங்கள் விளங்கவில்லை. சக்திபீடம் 108 என்று தேவீபாகவதம் கூறுகின்றது.*

தேவஸ்திரீகளை தனது போகஸ்திரீகளாக்கிக் கொண்டான். அஷ்டதிக்பாலகர்களும் ஏனைய தேவர்களும் அவனிட்ட வேலைகளைச் செய்து வந்தனர். இவனது அட்டஹாசத்துக்கு ஓர் எல்லையேயில்லை என்னும்படி ஆணவம் கொண்டு சஞ்சரித்தான்.

ஒரு நாள் நாரதர் அவன் இருக்கை சென்றார். அனலாக்ஷன் அவரைக் கண்டு வணங்காமல் மதோன்மத்தனமாய் அமர்ந்து கொண்டு 'ஓய் நாரதரே! என்ன விசேஷம்? எங்கெல்லாம் சென்றீர்? எதையெல்லாம் பார்த்தீர்? ஏன் ஆக்ஞாசக்கிரம் எங்கும் ஓங்கியிருக்கின்றதோ? என் புகழ் எங்கும் பரவியிருக்கின்றதா? தெரிவியும் !" என்று கேட்டான். நாரதரும் இவனை ஒழிக்க உபாயம் தேடினவராய் அதிக விநயமாகச் சொல்லலுற்றார். "அரக்கர் திலகமே! விசேஷமில்லாமல் நான் உன்னை நாடி வருவேனா? திரிலோகங்களிலும் நடக்கும் விஷயங்களை நேரில் அறிந்து உன்னிடம் வந்து சொல்வதற்காகத் தானே என்னை மட்டும் சுதந்திரமாகத்திரிய விட்டிருக்கிறாய். நான் பார்த்த ஒரு விசேஷத்தைச் சொல்லவே ஓடோடி வந்தேன். ஜம்புத் வீபத்திலே, தக்ஷிண பார்சுவத்திலே காவிரி புண்ணியநதியாகும். வேகவதி என்ற மஹா நதிக்கும் இடையே தாத்ரீவனம் என்ற ஓர் பிரதேசம் இருக்கின்றது. அந்த நெல்லிவன நடுவில் பத்ம புஷ்கரணி என்றொரு தாமரைத் தடாகம் இருக்கின்றது. அதன் நடுவில் ஆயிரம் இதழ் கொண்ட தாமரை மலர் ஒன்று தோன்றி அதன் காய் வளர்ந்து நிமிர்ந்து ஓர் பர்வதமாய் நிற்கின்றது. அந்தப் பர்வதத்தின் அடிப்பாகத்தின் உள் புறத்தில் ஓர் அழகான பிலம் இருக்கின்றது. அதன் அழகையும் சிறப்பையும் நான் என்னவென்று கூறுவது. உள்ளே நந்தவனங்களும், தடாகங்களும், மாளிகைகளும் இருக்கின்றன. நவரத்னங்களும் எங்கு பார்த்தாலும் சிதறிக் கிடக்கின்றன. உனது சித்ரிகாவனத்தை விட பதின் மடங்கு சோபையுடன் திழ்கின்றது. அங்கு உன் ஜன்ம விரோதிகளான தேவர்களும் இருடிகளும் உன் கைக்குக்கிட்டாமல் தப்பி ஒடி ப்யமின்றி சகல சுக போகங்களையும் அனுபவித்துக் கொண்டு நிம்மதியாக வாழ்கின்றனர். அந்த குகையை பார்த்த என் மனதில் ஓர் எண்ணம் உதயமானது. அதாவது, அந்த தேஜோமயமான குகையில் வசிக்கத் தகுந்தவனும், அந்த சொர்க்க போகங்களை அனுபவிக்கத் தகுதியுடையவனும் உன்னையன்றி இம்மூவுலகில் யாருளர் என்று நினைத்தேன். உடனே! உன்னைக் காண இங்கு வந்தேன்," என்றார்.

இவ்வாறு கூறியதைக் கேட்ட அனலாஷன் சீறி எழுந்தான். தன் நூறு வாய்களின் பற்களை நெற நெறவெனக் கடித்தான். அந்த ஓசை இடி போல் முழங்கியது. தனது இரு நூறு கண்களும் சிவக்ககோபக்கனல் பொங்கி எழுந்தது. நூறு முகங்களில் உள்ள மீசைகள் துடித்தன. இரு நூறு புஜங்களும் மலைகள் போல் உயர்ந்தன. பிரளய காலாக்னி போல் துள்ளி எழுந்தான். தன் சேனாபதிகளான, கோமுகன், கரிமுகன், யாளிமுகன், தசமுகன், சண்டன், பிரசண்டன், முண்டன் முதலியவர்களை அழைத்தான். உடனே அசுரசைன்யம் தயாராகட்டும் என்று கட்டளையிட்டான். அவ்வாறே ஒரு நொடிப்பொழுதில் பதினாயிரம் வெள்ளம் சைன்யம் யுத்த சன்னத்தமாக வந்து நின்றது. அனலாக்ஷனும் இரதத்தில் ஏறினார். இதற்கு முன்பே அனலாக்ஷனின் ஒற்றர்கள் சிலர் பத்மகிரி குகைகள் வசிக்கும் தேவர்களைக் கண்டு எமது அரசன் அனலாக்ஷன் யுத்த சன்னத்தனாக வருகின்றான். அவன் வரும் முன்னரே இந்த குகையை விட்டு வேறெங்காவது சென்று விடுங்கள். இல்லையேல் நீங்கள் அழிவது திண்ணம்" என்று கூறினார். இக்கூற்றைக்கேட்ட தேவர்கள் பயத்தால் நடுங்கினவராய்த் தமக்கு அபயம் கொடுத்த பத்மகிரி நாதனை தோத்திரம் செய்து தமக்கு அபயம் அளிக்க வேண்டும் என்று பிரார்த்தித்தனர். அதற்கு "பத்மகிரீசர் தேவர்களே! திருமூர்த்திகளாலும் அழிக்க முடியாதபடி அவன் நம்மிடம் வரம் பெற்றுள்ளான். வரம் கொடுத்த நாமே அவனை அழிப்பது முறையன்று. என்னால் ஒன்றும் செய்ய முடியாது. ஆயினும் உங்களுக்கு ஓர் யோசனை சொல்லுகின்றேன்.

அதாவது என் பாகம் பிரியாளான பராசக்தியை நோக்கித் தவம் செய்யுங்கள், அவள் ஒருவேளை உங்களை இந்த ஆபத்தினின்றும் காக்கக்கூடியவள்" என்று கூறினார்.

தேவர்களும் அவ்வாறே ஜகன் மாதாவாகிய அம்பிகையை தியானித்தார்கள். பல மந்திரங்களால் துதித்தார்கள். அவர்களின் முறையீட்டுக்கு இணங்கி பத்மகிரிச் சிகரமான சூக்ஷ்மலிங்கத்தினின்றும் இதுகாறும் இறைவனை விட்டு நீங்காமல் மறைந்திருந்த பராசக்தி ஆவிர்பவமானாள். அவர்களை தரிசித்து தேவர்கள் தோத்திரம் செய்தார்கள். "தாயே! மாஹேச்வரீ! ஜகதம்பிகே! உன் கடாக்ஷத்தாலன்றோ மூவுலகும் தோன்றுகின்றன, வாழ்கின்றன. உன் அதிஷ்டானத்தாலன்றோ சிவமும் தொழிற்பட்டு பஞ்சப்ரம்மாக்களாப் பிரிந்து சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோபவம், அனுக்ரஹம் என்ற பஞ்சக்ருத்யங்களையும் செய்கின்றார். ஆலால விஷமும் உன் கைப்பட்ட மாத்திரத்தில் அமிர்தமாக மாறவில்லையா? உன்னுடைய திருக்கரங்களில் இருக்கும் பத்து விரல்களினின்றும் தோன்றிய விஷ்ணுவின் பத்து அவதாரங்களும் துஷ்ட நிக்ர சிஷ்ட பரிபாலனம் பண்ணவில்லையா? இச்சமயம் எங்களைக் காப்பாற்றுவது உன் பொறுப்பு. நீ இறைவனின் அருட்சத்தியன்றோ? என்று பலவாறு தோத்தரித்து வேண்டிக்கொண்டனர். க்ஷிப்ரப்ஸாதினீயான பராசக்தி அவர்களுக்கு அபயம் கொடுத்து தனது யோகினீ கணங்களில் டாகினீ, ராடனீ, லாகினீ, காகினீ, ஸாகினீ, ஹாகினீ, யாகினீ ஆகிய எழுவரை அழைத்து "நீர் சென்று ஜ்யோதிஷ்மதியை நெருப்பிட்டுக் கொளுத்தி சாம்பலாக்குங்கள். நமது பராக்கிரமத்தைக் கண்டு ஒரு சமயம் அனலாக்ஷன் ஈண்டு வாராதொழிவன்" என்று ஏவினாள். அவர்களும் அவ்வாறே சென்று அனலாசுரனின் வாசஸ்தலமான ஜ்யோதிஷ்மதியை சுட்டுச் சாம்பலாக்கினார். இந்தச் செய்தியைக் கேட்ட அனலாக்ஷன் கோபமடைந்து தனது சைன்யத்தை திண்டிமாபுரியை நோக்கிச் செலுத்தினான். ஸப்த சமுத்திரங்களும் திரண்டு வந்ததுபோல் அசுரசைன்னியம் அணி அணியாக வந்து கொண்ணடிருந்தது.

## 7-ம் அத்தியாயம்

ஒற்றர்களால் அசுர சைன்ய வருகையை அறிந்த தேவி, "நாம் சூடு காட்டியும் திருந்தினானில்லை. வரட்டும், அவனையும் அவன் சைன்யத்தையும் அழிப்போம்" என்று கூறித் தனது பரிவார தேவதைகளான [8] ப்ராம்ஹி, மாஹேச்வரி, கௌமாரி, வைஷ்ணவி, வாராஹி, மாஹேந்த்ரீ, சாமுண்டி என்ற ஸப்த மாதர்களையும் தனது சேனைத்தலைவிகளான பாலை, மந்த்ரிணி, வாராஹி, சம்பத்தரி, அச்வாருடா, தண்டினீ முதலியவர்களையும் முன் சொன்ன ஏழு யோகினிகளையும், அவர்களோடு அறுபத்து நான்கு கோடி யோகினிகள் அடங்கிய சைன்யத்தையும் கிரிசக்ரம், சக்ரராஜம் முதலிய அநேக இரதங்களையும் திரட்டி யுத்த சன்னத்தையாய் எழுந்தருளினாள்.

*[8] பராசக்தியின் பரிவார தேவதைகளைப்பற்றியும், சேனைத் தலைவிகளைப் பற்றியும், டாகினீ முதலிய யோகினீ கணங்களைப் பற்றியும் விவரம் தெரிய விம்புவோர் லலிதா ஸஹஸ்ரநாம பாஷ்யம், பரசுராம கல்பசூத்ரம் தந்த்ர ராஜ தந்த்ரம் போன்ற சாக்தாகம நூல்களைப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம். அம்பாளுக்கு அறுபத்திநான்குகோடி யோகினீ கணங்கள் இருப்பதாய் லலிதா ஸஹஸ்ரநாமத்தில் 237வது நாமா குறிக்கின்றது. டாகினீ முதலிய ஏழு யோகினிகளைப் பற்றியும் ஸஹஸ்ரநாமத்தில் கூறப்பட்டிருக்கின்றது.*

அப்போது அம்பாள் எடுத்துக்கொண்ட விச்வரூபம் யாராலும் வர்ணிக்க முடியாது. ஆயிரம் சிகரங்களில் ஆயிரம் சூரியர்கள் போல் கிரீடங்கள் மின்னின. இரண்டாயிரம் கைகளிலும் நானாவித அஸ்த்ர சஸ்த்ரரதி ஆயுதங்களைத் தாங்கி விரித்த கூந்தலும், கோரைப்பற்களும், சிவந்த ஆடையும் ஸ்ர்வாபரண பூஷிதையாய் பத்ரகாளியாக உருக் கொண்டு சுயம் பிரகாசமாய் விளங்கினாள். சிம்ஹவாஹினியாய் வலது முன் கையில் விளங்கும் திரிசூலப்படையுடன் அம்பாள் தோன்றிய காட்சி மனதினாலும் சிந்திக்க முடியாது. வாயினாலும் பகர வொண்ணாது. அவளுடைய சைன்யம் அப்படியே ஆகாய வீதியிலே மேலே கிளம்பி சூரிய சந்த்ர நக்ஷித்திர லோகங்களை மறைத்தது. ஆகாயத்தில் கிளம்பிய சைன்யம் அனலாசுரனின் அசுரப்படைகளின் மீது திடீரென்று இறங்கித் தாக்கியது. அசுரப்படை சின்னா பின்னப்பட்டு உயிர்துறந்தவர்களும், கையிழந்தவர்களும், கால் இழந்தவரும், கண் இழந்தவரும் இவ்வாறு பலவிதமாக பாதிக்கப்பட்டு சிதறி ஓடியது. அனலாசுரன் சிதறி ஓடிஉயிர் தப்பிய எஞ்சிநின்ற அசுரர்களைத் திரட்டி மறுபடியும் யுத்தத்துக்கு ஆயத்தமாகி யோகினீ கணங்களைத் தாக்கினான். கடும்போர் நடந்தது. அனலாக்ஷன் சேனைத் தலைவர்களை பராசக்தியின் யோகினிகள் தனித்தனியாய் எதிர்த்து யுத்தம் செய்தனர். எப்படியெனில், சர்ப்பசோமன் என்பவனை ப்ராம்ஹீசக்தியும், வ்யாக்ரலோமனை ஈச்வரியும், ஸிம்ஹலோமனை கௌமாரியும், தூம்ரலோமனை வைஷ்ணவியும், தூம்ராக்ஷனை சாமுண்டியும், வால்மீகலோமனை துர்க்கையும், வித்யுத்ஜிஹ்வனை நாரசிம்ஹியும், வக்ரமாஸனை கராளியும், தூம்ர கர்ணனை கங்காளியும், கரிமுகனை காளராத்ரியும், செந்நாய்முகத்தனை வஜ்ரேச்வரியும் இவ்வாறு பல அசுர வீரர்களுடன் யோகினீ கணங்கள் தனித்தனியாய் எதிர்த்துப் போர் புரிந்தனர். ஒவ்வொரு அசுர வீரரும் யுத்தத்தில் தோல்வியுற்றனர். யோகினிகள் அரக்கரின் இரத்தத்தால் நனைந்த ஆடைகளுடன், அசுரர்களின் குடல்களை மாலைகளாகப் போட்டுக்கொண்டும், தமது ஆயுதங்களில் அரக்கர்களின் தலைகளைக் கோர்த்து த்வஜம்போல் தூக்கிக்கொண்டும் ஆரவாரம் செய்தனர்.

தன் சேனை இவ்வாறு சின்னா பின்னப்படுவதைக் கண்ட அனலாக்ஷன், தன் இருநூறு கரங்களாலும் "சதக்னி" என்ற அஸ்த்ரங்களை யோகினிகள் மீது பிரயோகம் செய்தான். அவற்றால் அடிபட்ட யோகினிகள் மூர்ச்சித்து வீழ்ந்தனர். பார்த்தாள் பராசக்தி! அதிக கோபம் கொண்டாள். நெய்வார்த்த அக்னி ஜ்வாலைபோல் துள்ளி எழுந்தாள். தன்னுடைய ஞானாஸ்திரத்தால் மூர்ச்சித்திருந்த யோகினிகளை எழுப்பினாள். தானே அனலாக்ஷன் முன் தோன்றினாள். "அடே துராத்மா! என் ஆத்ம நாதனாகிய பத்மகிரீசன் கொடுத்த வரங்களால் சகல சம்பத்துகளும், பெருமைகளும் பெற்று வாழ்ந்தாய். அவரால் கொடுக்கப்பட்ட வரங்களையடைந்தவன் என்பதற்காக இதுவரை உன்னைக்கொல்லாது இருந்தேன். உனக்கு எச்சரிக்கை கொடுக்க உன் ஜ்யோதிஷ் மதிநகரை தீ யிட்டழிக்கச் செய்தேன். உன் சேனா வீரரை என் யோகினிகள் கொன்று குவித்தனர். உன் சேனையும் அழிந்தது. இன்னுமா உனக்கு புத்தி வரவில்லை? இப்பொழுதாவது உன் தீய எண்ணத்தை விட்டு உன் இருப்பிடம் செல்வாயானால் உயர் தப்பி வாழலாம். துஷ்டர்களை அழித்து சிஷ்டர்களைக் காப்பதே என் கடமை. பத்மகிரியின் குகையில் வாசம் செய்ய நினைத்தாயடா! அது என்னவென்று நினைத்தாய்? எம்பிரானின் உருவமான பத்மகிரியில் அவர் ஜீவராசிகளை வைத்தக காக்கும் வயிறு போன்றது. அடியார் உள்ளத்தில் அவர் இருப்பார் அவர் உள்ளத்தில் அடியார் இருப்பார் என்ற மகத்தான தத்துவத்தை விளக்கவே தாமே பத்மகிரியாய் ஆவிர்பவித்து, தேவர்களுக்கு அபயம் கொடுத்துத் தன் குக்ஷியில் வைத்துக் காப்பாற்றவே அந்த பிலத்ன்த சங்கல்ப மாத்திரத்தில் நிர்மாணித்தார். அவர் மணி வயிற்றில் உன்போன்ற பாபிகளுக்கு இடமுண்டோ? ஆராய்ந்தறியாமல் மமதையால் உனக்கே கேடு விளைவித்துக் கொண்டாய். இப்பவும், சொல்லுகிறேன். இந்தத்த்வா ஹரசியத்தையறிந்தாவது திரும்பிப்போ" என்று கருணையோடு கூறினாள்.

திரிமூர்த்திகளாலும் வெல்லமுடியாது என்று வரம் வாங்கின அனலாக்ஷன். அகம்பாவத்தால் பராசக்தியைக் கேவலம் ஓர் பெண்ணால் என்ன முடியும் என்று மதித்தவனாய்க் கோயச்சிரிப்புச் சிரித்து, 'பத்ரகாளி! உன் ஆயிரம் தலைகளும், இரண்டாயிரம் கைகளும், கோரைப்பற்களும், இரத்த வர்ணமான உன் மேனியும் கண்டுங்கூட அந்த பத்மகிரீசன் எப்படித்தான் உன்னை மனைவியாக ஏற்றுக்கொண்டானோ! மும்மூர்த்திகளுக்கும் அஞ்சாத நான் பெண்பாலாகிய உனக்கா புறமுதுகு காட்ட வே;ணடும்? எனக்கு வரங்களைக் கொடுத்துவிட்டு மலைக்குள் ஒளிந்து கொண்டு ஒரு பெண்ணைப் போருக்கு அனுப்பினானே, அந்தத்தந்தையற்ற தாயற்ற தப்பிலி, [9] அவன் மண்டை ஓடுகளைக் கோர்த்து மாலையாய் அணிந்து, பிரம்ம கபாலத்தில் இரந்துண்பவனல்லவா! சுடு காட்டில் பேயாடாடும் பித்தன்! அவனே வந்தாலும் நான் முன் வைத்த காலை பின் வாங்க மாட்டேன்" என்று ஆரவாரித்தான். லோகமாதாவாகிய பராசக்தி தன் தாய்மைக் குணத்தால் எதையும் பொறுப்பாள். ஆனால் சிவநிந்தனையை மட்டும் பொறுக்க மாட்டாள். கோபம் பொங்கி எழுந்தது. இதோ உன்னை கொன்றே தீருவேன் என்று கிளம்பினாள். அனலாசூரனின் ரதத்தை தகர்த்தாள், சாரதியையும், குதிரைகளையும் கொன்றாள், அவனுடைய இருநூறு கைகளில் இருந்த ஆயுதங்கள் ஒவ்வொன்றாகக் கீழே விழும்படி குறி பார்த்து பாணங்களைப் பிரயோகம் செய்தாள். பராசக்தியின், சாகஸத்தைக் கண்டு அனலன் ஆச்சரியம் அடைந்தான். என்னே, இவளை சாமான்யப் பெண் என்றல்லவா நினைத்தேன். இனிமேல் இவளோடு நேர்நின்று போர் புரிவதில் பலனில்லை.' என நினைத்து தனது ராக்ஷஸ மாயையால் காட்டெருமை, காட்டுப்பன்றி, சிம்ஹம், புலி, முதலிய பல உருவங்களை எடுத்துப் போர் புரிந்தான். அம்பிகையும் அவை ஒவ்வொன்றையும் வதைத்தாள். பின் அனலன் மேகத்தில் மறைந்து கொண்டு வருணாஸ்த்ரம் பிரயோகம் செய்தான். மாயைக்கே பிறப்பிடமான பராசக்தியிடம் இந்த ராக்ஷஸ மாயை என்ன செய்ய முடியும்? அம்பிகை வாயுவாஸ்த்ரத்தால் மேகத்தைப் பிளந்து அனலாக்ஷனை வெளிப்படுத்தினாள். அவன் ஓர் பர்வதமாக நின்றான். தேவி வஜ்ராயுதத்தால் அம்மலையைத் தூளாக்கினாள். இவ்வாறு இன்னும் பற்பல விதமாய் அனலாசூரன் கடும்போர் செய்தான். இறுதியில் அவன் ஆகாய மார்க்கமாகக் கிளம்பும் சமயம் பார்த்து அவன் கால்களைப் பற்றி கர கர வெனச் சுழற்றி அதிவேகமாய் மேலே எறிந்தாள். அவன் நட்சத்திர மண்டலம் வரை சென்று மூர்ச்சித்துக் கீழே விழுந்தான். தேவி தனது திரிசூலப்படையை அவன் மார்பில் பாய்ச்சி நெஞ்சைப் பிளந்து கொன்றாள். அவன் உடல் மூன்று பாகங்களாகப் பிளக்கப்பட்டு அவை ஒவ்வொன்றும் பத்மகிரி சாரலில் ஒவ்வொரு இடத்திலும் வீழ்ந்தன. அவன் தலை பத்மகிரி பர்வதத்தின் தென்கிழக்கிலும், கால் கிழக்கிலும், முண்டம் தெற்கிலும் விழுந்தன. அவை கற்பாரைகளாக மாறி இன்றும் பத்மகிரியின் மூன்று பக்கங்களிலும் சிறு குன்றுகளாக இருப்பதைக் காணலாம். தேவர்கள் புஷ்பமாரி பொழிந்தனர். ப்ரம்ஹீ முதலிய யோகினீ கணங்களும் யுத்தம் வெற்றிகரமாய் முடித்ததும் அம்பிகையின் அம்ஸத்திலிருந்து உண்டானவர்களாதலாலே தேவியின் சரீரத்திலேயே ஐக்கியம் அடைந்தனர்." என நான்முகன் அகஸ்தியருக்கு அனலாக்ஷ வதத்தை எடுத்துரைத்தார்.

---

[9] *தப்பிலி :– தப்பு இல்லாதவன்*

[10] *அனலாக்ஷ சம்ஹாரம் 7, 8 என இரண்டு அத்தியாயங்களாகக் கூறப்பட்டிருக்கின்றது. அனலாக்ஷனுக்கும் பராசக்திக்கும் நடந்த போரை மிக விரிவாக எழுதப்பட்டிருக்கின்றது. அந்த இரண்டு அத்தியாயங்களைச் சுருக்கி ஒரே அத்தியாயமாக இங்கு கொடுத்துள்ளேன். அடுத்த 8ம் அத்தியாயம் என்று இங்கு வருவது மூல கிரந்தத்தில் 9ம் அத்தியாயமாகும்.*

# 8-ம் அத்தியாயம்

## அபிராமாம்பிகை ஆவிர்பவம்,

பிரம்மன் தொடர்ந்து சொல்லுகிறார். ஏ! கும்பஜா, இவ்வாறு அனலாக்ஷனையும் அவன் சைன்யங்களையும் சம்ஹரித்த பின்பும் தேவியின் உக்ரம் தணியவில்லை. சுழல்கின்ற கண்களோடு ஆயிரம் தலைகளும் இரண்டாயிரம் திருக்கரங்களுமாக விச்வரூப மெடுத்த தேவியின் கோபக்கனல் திக்குகளெல்லாம் வியாபித்தது. அவளுடைய நேத்திரங்களினின்றும் வெளிப்பட்ட பொறிகள் அண்டங்களெல்லாம் பறந்து யாவரையும் துன்புறுத்தின. சிருஷ்டிக்கப்பட்ட சகல புவனங்களும் பராசக்தியின் கோபாக்னியால் வெந்து சாம்பலாகி விடுமோ எனத் தேவர்கள் அஞ்சினார்கள். அவர்கள் யாவரும் சேர்ந்து மஹா பயங்கர ரூபமாய்க் காட்சியளித்த பத்ரகாளியை பிரார்த்தித்தனர், "ஹே! மஹாதேவி! மஹாமாயே! ஸர்வலோக வசங்கரி! ஜகஜ்ஜனனி! உமது இந்த அதிபயங்கரமான சொரூபத்தைக் கண்டு அஞ்சுகின்றோம். உமதிடமாக உண்டாகும் சுவாலையால் நாங்கள் தகிக்கப்படுவோம் போல் காண்கின்றது. ஆகையால் தாயே! உமது இந்த விசுவரூபத்தைக்கரந்து சாந்த சொரூபியாய் மக்களும் தேவரும் கண்டு மகிழ்ந்து போற்றிப்பணியும்படி சௌந்தர்ய தேவதையாய் காட்சியளிக்க வேண்டும் என வேண்டிக் கொண்டனர். பிரம்மா, விஷ்ணு, இந்திராதி திக்பாலர்களும், ஏனைய தேவர்களும், மஹரிஷிகளும் ஒன்று கூடியும் தனித்தனியாயும் பலவிதமாய் தேவியை வேண்டிக்கொண்டனர்.[11] அவர்களில் விஷ்ணுதேவியை வணங்கி "ஓ ஜகத்காரண சக்தியே! இச்சராசரங்களை ஆக்கி அழிக்க வல்லமையுடைய உமது சரணாவிந்த தூளியை சிறிது சேகரித்துவைத்துக்கொண்டு பிரம்மா புவனங்களைப் படைக்கிறார். இவ்வாறு சிருஷ்டிக்கப்பட்ட புவனத்ரயங்களும் முடிவில் எந்த உன் மாயையில் லயமடைகின்றதோ அத்தகைய ஸர்வாங்க ஸௌந்தர்ய திவ்யமங்கள சொரூபியாய் எங்கள் முன் தோன்றுவாயாக" என்று பிரார்த்தித்தார். இவ்வாறு பிரம்மா, இந்திரன், யமன், வருணன் குபேரன், வாயு, அக்னி யாவரும் பிரார்த்தித்தனர். அவர்கள் செய்த தோத்திரங்களாலும் பத்ரகாளியின் உக்ரத்தை சமனம் பண்ண முடிய-வில்லை. என்ன செய்வதென்று ஒன்றுகூடி ஆலோசித்தனர். "அனலாஷன் சைன்யமான தீய சக்திகளை அழிப்பதற்கு நமது வேண்டுகோளின்படி பத்மகிரிநாதன் பராசக்தியை அனுப்பினார். அழிக்கும் வல்லமை பொருந்திய ஓர் பெரிய சக்தியை அதன் பூரண ஆற்றல் தெரியாது நாமே அனலாக்ஷன் மீது ஏவினோம். அந்த சக்தியின் அழிக்கும் ஏற்றல் அனலாக்ஷனையும் அவனது பதினாயிரம் வெள்ளம் சைன்யத்தை அழித்த பின்பும் கொஞ்சம் எஞ்சியிருக்கின்றது. எந்த இறைவனால் இந்த சக்தி அனுப்பப்பட்டதோ அவனே அதை அடக்க வல்லவன்" என்று முடிவுக்கு வந்து யாவரும் பத்மாசலேசரை சரணடைந்து வேண்டிக்கொண்டனர். அதுவரை சக்தியைப் பிரிந்து சிவம் தொழிலற்றுக் கண்மூடி மௌனியானி பர்வத சிகரத்தில் அமர்ந்திருந்தார். தேவர்கள் முறையிடுவதைக் கேட்டு கண்களைத் திறந்து தேவர்களுக்கு அபயம் அளித்தார். தேவியை அழைத்தார். "கௌரீ! அப்போது அலர்ந்த பங்கஜங்களுக்கொப்பான நயனங்களும், புன்சிரிப்பு இழைந்தோடும் வாயும், மாந்தளிரைப் பழிக்கும் திருமேனியும் கொண்டு எந்த ஸௌந்தர்ய ரூபத்தில் உன்னை தேவர்கள் பூஜித்து சொர்க்காதி போகங்களையும் அடைந்தார்களோ, எந்த மனோகரமான வடிவ தியானத்தால் உபாஸகர்கள் இம்மையில் சகல ஸௌபாக்யங்களையும்

---

*[11] மூலத்தில் இந்த இடத்தில் தேவர்கள் ஒவ்வொருவருக்கும் தேவியை குறித்துக்கூறிய அழகான தோத்திரங்கள் தனித்தனியாய் இருக்கின்றன. அதில் விஷ்ணுவின் தோத்திரம் மட்டும் அதில் அடங்கிய அரும்பெரும் தத்துவத்திற்காக சுருக்கமாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது.*

அடைந்து மறுமையில் உன திருவடித் தாமரையில் லயம் ஆகின்றனரோ, எந்த ரூப லாவண்ய சொரூபத்தை நானும் ஆராதித்து விஷ பக்ஷணம் செய்தும் அழியாமல் இருக்கின்றேனோ அந்த மஹா மகிமை பொருந்திய "அபிராமா" [12] ரூபத்தில் வர வேண்டும்" என்றார். அதனைக் கேட்ட மஹாகாளி தன் விச்வரூபத்தைக் கரந்து அபிராமாம்பிகை யாகக் காட்சியளித்தாள் (பிரம்மா அந்த ஸௌந்தர்ய தேவதையை கீழ்க்கண்டவாறு வர்ணிக்கிறார்) தாமரைபோன்று சிவந்து ஆமை முதுகு போன்ற திருவடிகளும், மன்மதனின் அம்புறாத் தூணி போன்ற முழங்கால்களும், வாழை மரத்தைப் பழித்து வெள்ளையானையின் துதிக்கையில் சிந்தூரம் பூசியது போன்ற துடைகளும், தங்கக்கொடிபோன்று ஒருபிடியில் அடங்கும் சிற்றிடையும், மாரனும் ரதியும் ஜலக்ரீடை செய்யும் மடுவோவென்ன நாபியும், அழகு பொருந்த அமைந்த வயிற்றில் சித்தஜன் ஏறும்படிக்கட்டோ என மூன்று மடிப்புகளும், தாமரைத் தண்டுக்கொப்பான மிருதுவான இரண்டு தோள்களும், வலம்புரிச் சங்கு போன்ற கழுத்தும், வீணையைப் பழிக்கும் வாக்கும், வதன ஸௌந்தர்ய வாரியில் விளையாடும் மீன்கள் போன்ற நயனங்களும், அஷ்டமி சந்த்ரன் போன்ற நுதலும், அதில் சந்த்ரனின் களங்கமோ என கஸ்தூரி திலகமும் எள்ளின் பூவைப்பழிக்கும் நாசியும், அதில் சகலாகமங்களும் நிறைந்த சம்புடமோ என்ன விலைமதிக்க முடியாத முத்தையுடைய நாகாபரணமும் பலவித சுகந்த புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்ட கேசபாரமும், தாரகைகளோ என்ன பிரகாசமுடைய ரத்னங்களாலாகிய ஆபரணங்களை அணிந்த திருச்செவிகளும். பவளமும் கொவ்வைக் கனியும் வெட்கும் அதரங்களும், மாதுளவிரையோ, முத்து வரிசையோ என்ன தந்தவரிசையும், கருணையினால் மலர்ந்து காதளவு நீண்ட கண்களும், நவரத்ன கசிதமான கிரீடமும் உடையவளாய் [13] ஒரு கையில் தாமரையைத் தாங்கி மற்றொரு கையை லம்ப ஹஸ்தமாய், தரிசிப்பவரை ரமிக்கச் செய்யும் அதிரூபலாவண்ய ஸௌந்தர்யசோபையுடன் பத்மகிரீசன் முன்தோன்றிப் புன்னகை பூத்தாள். தேவர்கள் கண்டு பிரமிப்புடன் கூடிய மகிழ்ச்சியை அடைந்தனர்.

---

[12] *இப்புராணத்தைப் படிக்கும் ஆஸ்திகச் செல்வர்களுக்கு ஓர் முக்கிய அறிவிப்பு நம் நகரில் எழுந்தருளியிருக்கும் தேவியை நாம் "அபிராமி" என்றே அழைத்துப் பழகிவிட்டோம். உண்மையில் அவளை "அபிராமி" "அபிராமாம்பிகை" என்று "ராமா" என்ற சப்தத்தோடு தான் அழைக்க வேண்டும். அபிராமி வேறு அபிராமா வேறு. அபிராமி என்ற அம்பிகை திருக்கடவூர் என்ற க்ஷேத்ரத்தில் எழுந்தருளியிருக்கும் மூர்த்தம் அங்கு அந்த அன்னைக்கு நான்கு கைகள் இரண்டு அபயவரதமாயும் மற்ற இரண்டு கைகளில் அக்ஷமாலையும் தாமரையும் தாங்கி விளங்குகின்றாள். நமது அபிராமாவுக்கு இரண்டு திருக்கரங்கள் ஒன்றில் தாமரையும், மற்றொன்று லம்பஹஸ்தமாயும் (அதாவது தொங்கும் கை) இருப்பதைப் பார்க்கிறோம். மேலும் இப்புராணத்தின் மந்த்ர விளக்கப் பகுதியில் "அபிராமா" என்று பெயரே மந்த்ராக்ஷரங்கள் அடங்கியதாகக் கூறப்படுகின்றது. ஆகவே "அபிராமா" என்று அழைப்பதுவே ஓர் மந்த்ர பிரயோகம் ஆகின்றது. ஆதலால் இதனை நன்குணர்ந்து நமதன்னையை அபிராமி என்றழைக்காமல் அபிராமாவென்றே அழைப்பது சாலச்சிறந்தது என்று பணிவுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன் (ஆசிரியர்)*

[13] *அபிராமா மூர்த்தம் அபயவாத முத்திரைகள் இல்லாமலிருப்பதின் தத்துவம் சங்கரர் எழுதிய ஸௌந்தர்யலஹரியில் நான்காவது சுலோகத்தில் விளக்கப்படுகின்றது. மற்ற தேவதைகள் எல்லாம் அபயம் கொடுப்பதையும் வரம் கொடுப்பதையும் தங்களுடைய கைகளால் அபயவாத முத்திரைகாட்டி வெளியிட்டுக் கொள்கிறார்கள். அம்பாள் ஒருவள் தான் அவ்வாறு அபிநயத்தின் மூலம் வெளியிடுவதில்லை. ஏனெனில் மற்ற தேவதைகள் தங்கள் கையால் செய்யக்கூடியதை அம்பாளுடைய பாதங்களே செய்யும் வல்லமையுடையன. தந்த்ரராஜம், பாவனோப நிஷத், லலிதாஸஹஸ்ரநாமம், லலிதாஸ்தவம் போன்ற நூல்களில் அம்பாளின் தியான சுலோகங்கள் இருப்பவற்றில் எதிலும் அம்பாளுக்கு அபயவாதம் இருப்பதாகச் சொல்லப்படவில்லை. சதுர்புஜம் இருந்தபோதிலும் அவற்றில் புண்ட்ரேக்ஷு பாசாங்குச புஷ்பபாணங்கள் இருப்பதாகத்தான் கூறப்பட்டிருக்கின்றது. ஏனெனில் அபயவரத சக்தியானது அம்பாளுடைய சரணாரவிந்தங்களுக்கே இருப்பதால் முத்ராரூபமாக வெளியிடத் தேவையில்லை என்பது சாக்த சித்தாந்த உண்மை (ஆசிரியர்)*

பராசக்தியை காந்தர்வ முறையில் மணந்தீர், அதன்பின் பர்வதராஜனுக்குப் புத்திரியாய் அயோனிஜையாகத் தாமரை மலரில் தோன்றிய பார்வதீ தேவியாரை வேதோக்த சம்பிரதாயமாக மணந்து கொண்டீர். இன்னும் பற்பல க்ஷேத்ரங்களில் பற்பல உருவமும் நாமமும் தாங்கி நீங்கள் இருவரும் நித்ய கல்யாண மூர்த்திகளாக விளங்கினீர்கள். இதெல்லாம் உங்கள் திருவிளையாட்டேயன்றி வேறல்ல.

நீவிர் இருவரும் எத்தனை முறை விவாகம் செய்துகொண்டபோதிலும் உம்மை பிரம்மச்சாரி என்றும் அன்னையைக் கன்னியென்றுமே வேதாகமங்கள் கூறுகின்றன. உங்கள் விவாகத் தத்துவத்தை ஆகமங்கள் நிரூபிக்கின்றன. சிவசக்தி சம்மேளனமே புவனோற் பத்திகாரணம் என்று விளக்கப்பட்டிருக்கின்றது. ஆகையால் நீவிர் இருவரும் நாங்கள் கண்ணாரக் கண்டுகளிக்கும்படி உங்கள் இருவருக்கும் திருக்கல்யாண மஹோத்சவத்தை நடத்த அனுமதி தரல் வேண்டும் என்று திருமாலும் நான்முகனும், இந்திராதி தேவர்களும், மற்றைத் தேவரிஷிகணங்களும் ஏகோபித்து பிரார்த்தித்துக் கொண்டனர். பத்மகிரீசன் தன் முன் நிற்கும்.

அபிராமாம்பிகையைக் கடைக்கண் நோக்கிப் புன்னகை பூத்தார். அம்பிகையும் நாணத்தால் முகம் சிவக்கத் தலைகுனிந்து மந்தஹாஸம் செய்து, தன் சம்மதத்தைக் கூறாமல் கூறினாள். பத்மகிரிநாதர் தேவர்களைப் பார்த்து உங்கள் மனோபீஷ்டம் நிறைவேறட்டும் என்று ஆசீர்வதித்தார்.

## 9-ம் அத்தியாயம்

## திருக்கல்யாண மஹோத்சவம்

அகஸ்திய முனிவரே! அபிராமா பத்மகிரீசர் திருக்கல்யாண விமர்சையை என்னாலும் வர்ணிக்க இயலாது. தேவர்களின் ஏவலால் விச்வ கர்மவினால் நிர்மாணிக்கப்பட்ட நவரத்ன கசிதமான மஹா மண்டபத்தில் சகல தேவர்களும், ரிஷிகளும், பதினெண் கணங்களும், மற்றும் திண்டிமாபுரியில் முன் தவப்பயனால் வாழ வாய்ப்புப்பெற்ற ப்ரம்ம, க்ஷத்திரிய, வைசிய சூத்திரர்களில் மற்ற உத்தமர்களும், சிவகணங்களும், சிவனடியார்களும் வந்து குழுமினார்கள். ஸப்த ரிஷிகளும் வேதகோஷம் செய்தார்கள். கின்னர கிம்புருடாதி கணங்கள் இன்னிசை மாரி பொழிந்தனர். கந்தர்வர் வீணை வாசித்தனர். ரம்பை, மேனகை, திலோத்தமை, ஊர்வசி எனப்பட்ட தேவமாதர்கள் சாஸ்த்திர முறைப்படி நிர்த்தனம் செய்தனர். அடியார்களின் 'ஹர ! 'ஹர ! சப்தம் கடலின் ஓசையைத் தோற்கடித்தது. சிவ கணங்கள், சங்கம், பேரிகை, சின்னம், டமருகம், எக்காளம், கொம்பு முதலிய வாத்தியங்களை முழங்கினர். ஹிமவானும் மேனையும் தங்கள் திருக்குமாரத்தியின் விவாக மஹோத்சவத்தை இரண்டாம் முறையாகக்காண ஆவல் கொண்டு சகலவிதமான சீர்வரிசைகளோடு அவணெய்தினர். காமதேனு பிரசன்னமாகித் தனது "ஹுங்கார" சப்தத்தால் சகலருக்கும் ஆடை ஆபரணம், போஜனம் இவற்றை நல்கியது. ஸப்தத் வீபங்களிலிருந்தும் ஸப்த சமுத்ர தீர்த்தங்களைத் தங்கக் குடங்களில் நிறைத்து வேதவித்துக்களான அந்தணர் பலர் உகந்த மந்த்ரங்களால் அபிமந்திரித்து தலையில் சுமந்து கொண்டு வந்து சேர்ந்தனர். கங்கை, யமுனை, நர்மதை, காவிரி முதலிய நதிகளும் அங்கு பிரசன்னமாயின. அகில், சந்தனம், தேவதாரு முதலிய மரங்களின் குணங்களால் வாசனை தூபம் போடப்பட்டு நானாதிக்குகளிலும் நறுமணம் பரவியது.

அதிரஹஸ்ய யோகினிகள் என்று கூறப்பட்ட வஜ்ரேச்வரி, காமேச்வரி, பகமாலினி இவர்கள் பராபர ரஹஸ்ய யோகினியாகின்ற அபிராமா தேவிக்கு புண்ணிய தீர்த்தங்களால் மங்கள ஸ்நானம் செய்து வைத்தனர். வசின்யாதி வாக்தேவதைகள் அம்பாளின் புகழை வாய்விட்டுப் பாடிக் கொண்டே ஆபரணங்கள் அணிவிப்பவர்களும், கஸ்தூரி திலகம், இடுகின்றவர்களும், புஷ்ப மாலைகளை அணிவிப்பவரும், வாசனை திரவியங்களை லேபனம் பண்ணுகிறவர்களும், விசிறி கொண்டு வீசுகின்றவர்களும், தேவேந்த்ர லோகத்தில் நெய்யப்பட்ட சரிகை வேலைப் பாடமைந்த பொன்னாடையை அம்பாளுக்குக் கட்டுகிறவர்களும் பாதங்களில் நவரத்ன நூபுரங்களை அணிவிப்பவரும், அம்பாளுக்கு சிசுருஷை செய்வதில் அதிக சிரத்தை காட்டுகிறவர்களாய் மிக்கப் பரபரப்புடன் காணப்பட்டனர். பாதங்களில் செம்பஞ்சுக்குழம்பு தீட்டினர். இவ்வாறு அம்பாளின் பரிவார தேவதைகள் யாவரும் தமக்கு இந்த வாய்ப்புக் கிட்டியதே பெருமிதம் கொண்டு ஒருவருக்கொருவர் போட்டியிட்டுக்கொண்டு அழகுக்கு அழகு செய்தனர். பின்பு ஸப்தமாதரும் அம்பாள் பாதம்படும் இடங்களில் புஷ்பங்களைத் தூவினர். இவ்வாறு உபசரிக்கப்பட்ட தேவி, தண்டினீ சக்தி கட்டியம் கூற, பாலாசக்தியும் மந்த்ரிணீ சக்தியும் இருபக்கமும் கவரிவீச, காமேச்வரியும் வஜ்ரேச்வரியும் இரு பக்கம் கைலாகு கொடுக்க, பகமாலினீ சக்தி பின்புறமிருந்து புஷ்பக்குடை பிடிக்க வலக்கையில் கிளியுடன் கூடிய புஷ்பச் செண்டு ஏந்தி, இடதுகையை தொங்கவிட்டுக் கொண்டு, ஸர்வாபரண பூஷிதையாய் ரத்ன கசிதமானதும் பஞ்சாவரண சக்ராகாரமாய் அமைந்ததுமான விவாஹ மண்டபத்தில் பிரவேசித்தாள்.

எம்மிறைவன் பத்மகிரி நாதரும் தன்னைத்தன் கணங்கள் அலங்காரம் செய்ய மன்முவந்து சம்மதித்தருளி, அவர்களும் அவருக்கு ஆடை ஆபராணாதிகளை அணிவித்து கோடி சூர்யபிரகாசராய் ஆயிரங் கோடி காமர் அழகெலாம் திரண்டொன்றாகி மேயின எனினும் பத்மகிரீசரின் இரு சரணங்களின் தூய நல்லெழிலுக்கு ஆற்றாது என்னும்படியும், அண்ணலார் திருமேனியின் அடிமுதல் முடியின் காறும் எண்ணிலா ஊழி காலம் எத்திறம் நோக்கினாலும், கண்ணினால் அடங்காது கருத்தினால் அடங்காது என்னும் படியும் மனோவசாம கோசரமான பரம்பொருள் பத்மகிரிநாதனாகக் கல்யாண மண்டபத்துக்கு எழுந்தருளியபோது அவருடைய சீரும் சிறப்பும் இளமையும் எழிலும் பல்கால் பார்க்கினும் தெவிட்டாத காட்சியாக இருந்தது. அவரை திருமாலும் நான்முகனும் ஏனையோரும் வணங்கித் துதித்து போற்றிப்பரவி மிகுந்த பக்தி சிரத்தையுடன் அழைத்துச் சென்று, கல்யாண வேதிகையின் நடுவே அமைக்கப்பட்டிருந்த, இளஞ்சூரியனைப் போல் பிரகாசிக்கின்ற ரத்ன சிம்ஹாஸனத்தில் அமரச் செய்தார்கள். ஸர்வலக்ஷண ஸம்பன்னையாய், ஸர்வாபரண பூஷிதையாய் மந்தஹாஸ முகத்துடன், லஜ்ஜையினால் சிறிது வணங்கிய முகமண்டலத்தையுடைய அபிராமா தேவியை அலைமகளும், கலைமகளும் வல இடமாகக் கைலாகுகொடுத்து அழைத்து வந்து பத்மகிரீசரின் வலப்பக்கத்தில் அமரச் செய்தனர். பிரம்மாவே முக்கிய புரோகிதராய் அமர்ந்து விதிப்படி செய்யவேண்டிய சகல கிரியைகளையும் மந்த்ர பூர்வமாய்ச் செய்தார். ஹிமவான் அம்பிகையின் வலக்கரத்தினை இறைவனின் வலக்கரத்தில் வைத்து ஐயனே! உம்மையே என்றும் வழிபட்டுவரும் அடியேனுக்கு இரண்டாம் முறையாக என் புத்திரியை தாரா தத்தம் செய்யும் வாய்ப்பை உம்மால் அருளப்பெற்றேன். உன்னைவிட்டு சற்று அகலாத பராசக்தி லோக க்ஷேமத்தின் பொருட்டு உன்னினின்றும் வேறாகி அன்று மலைமகளாயும் இன்ற அபிராமாம்பிகையாகவும் காட்சியளிக்கும் என் புத்திரியை அக்னி சாக்ஷியாய், இம் மஹாசபையோர் முன்னிலையில் உமது பார்யையாக ஏற்றுக்கொள்ள வேண்டுகிறேன்" என்று தாரை வார்த்தான். "பின்பு அம்மையும் அப்பனும் அக்கினியை வலம் வந்து

ஸப்தபதி என்ற கிரியைச் செய்து முறைப்படி திருமணம் நடந்தேறியது. தேவர்கள் புஷ்பமாரி பெய்தார்கள். ஆகாயத்துந்துபி முழங்கியது. வேதகோஷமும், வாத்திய கோஷமும் வானளாவின. பின்பு அங்கு குழுமியிருந்த யாவர்க்கும் அவரவர் தகுதிக்குத் தக்கபடி மரியாதைகளை அதிகார நந்தி முன்னின்று செய்தார். பத்மகிரீசர் தனது பார்யையான அபிராமா தேவியின் அங்கலக்ஷணங்களைக் கண்டு ஆனந்தங்கொண்டு அவளை முன்போல் தன் இடப்பாகத்தணைத்து விருஷபாரூடராய் யாவர்க்கும் காட்சியளித்து அவரவர் தமதிருப்பிடம் செல்லுமாறுபணித்து பத்மகிரிச் சிகரமான சூக்குமலிங்கத்தில்இறைவியோடு மறைந்தருளினார் வந்திருந்த அனைவரும் இதுவரை நாம் அடையாத வெற்றியை அடைந்ததாக இறும்பூதெய்தி அவரவர் தமதிருப்பிடம் சேர்ந்தனர் என்று இந்த பரமபாவனமான அபிராமா பத்மகிரீச விவாக மஹோத்சவத்தை பிரம்மா அகஸ்தியருக்கு எடுத்துச் சொன்னார். (இந்தத் திருக்கல்யாணம் சித்திரை மாதம் பௌர்ணமி திதி ஹஸ்த நக்ஷத்திரம் கடக லக்னத்தில் நடந்ததாக இப்புராணம் கூறுகின்றது.)

## 10-வது அத்தியாயம்

## வாருண தீர்த்த மகிமை.

திருக்கல்யாண விமர்சையைக் கேட்ட அகஸ்தியர் உடல் புளகாங்கிதமடைய கண்களில் ஆனந்தக்கண்ணீர் பொழிய பக்தி பரவசம் பெருக்கெடுத்தோட பிரம்மாவை நோக்கி சுவாமி! இதுவரை இத்தல மகிமையும், மூர்த்தி மகிமையும் கூறியதுபோல அடியேனுக்கு இந்த க்ஷேத்ரத்தின் தீர்த்த மகிமையும் சொல்ல வேண்டும்" என்று கேட்டார். அதன்படியே பிரம்மனும் சொல்லலுற்றார்.

கேளும் குடமுனியே ! பர்வதரூபமான இந்த மஹாலிங்கத்தின் மேல் தளத்தில் ஐந்து புண்ணிய தீர்த்தங்கள் உள. அவை 1. வாருணை தீர்த்தம். 2. கதம்ப தீர்த்தம். 3. சிவகங்கா தீர்த்தம். 4. பாண்டவ தீர்த்தம். 5. திரௌபதி தீர்த்தம் என்பனவாகும்.

அவைகளில் முதலாகச் சொல்லப்பட்ட வாருணை தீர்த்தம் என்பது வருணனால் நிர்மாணிக்கப்பட்டது. அந்தப் புண்ணிய தீர்த்தத்தை ஒருமுறை தரிசனம் செய்தாலே ஒருவன் சமஸ்த பாபங்களிலிருந்து விடுதலை அடைகின்றான். கிருதயுகத்தில் ஒரு சமயம் இந்திரலோகத்திலிருந்து தேவசபை கூடிற்று. அப்பொழுது இந்திரன் தன் பதவியில் கர்வம் கொண்டவனாய்ந் தன்னைவிட உயர்ந்தோர் இல்லையென பெருமைகொண்டு மற்ற தேவர்கள் மனங்கோணப் பேசினான். அதைக்கேட்ட வருணன், "தேவராஜனே ! உலகம் ஜீவிப்பது மழையால். அதைப் பெறவே ரிஷிகளும் மக்களும் யாகாதிகளைச் செய்கின்றனர். அவ்வாறு செய்யப்படும் யாகங்களில் அக்னியில் இடப்படும் ஹவிஸ்ஸே தேவர்களுக்கு உணவாகின்றது. நானில்லையேல் உலகில் யாதொன்றும் நடைபெறாது. ஆகவே நானே பெரியவன் என்று மார்பு தட்டினான். இருவருக்கும் வாய்ச்சண்டை முற்றி யுத்தத்தில் முடிந்தது. வருணன் படுதோல்வி அடைந்தான். தன்னுடைய சகல சம்பத்துக்களையும் இழந்தவனாய், மிக்க வறியவனாய், பிரம்ம தேவரிடம் சென்று தன்னுடைய நிலைம்மையைக் கூறினான். தனக்கு விமோசனம் ஏற்பட ஏதாவது வழியுண்டா என்று வினவினான். அதைக்கேட்ட பிரம்மா வருணன் மீது இரக்கங் கொண்டு நீ தக்ஷிணபூமி சென்று சென்று அங்குள்ள தாத்ரீ வனத்தையடைந்தால் அங்கே சிவபெருமானே மலைவடிவாய், லிங்காகாரமாய் "பத்மாசலம்" என்று பெயருடன் திகழ்கின்றார்.

ஸப்தபதி என்ற கிரியைச் செய்து முறைப்படி திருமணம் நடந்தேறியது. தேவர்கள் புஷ்பமாரி பெய்தார்கள். ஆகாயத்துந்துபி முழங்கியது. வேதகோஷமும், வாத்திய கோஷமும் வானளாவின. பின்பு அங்கு குழுமியிருந்த யாவர்க்கும் அவரவர் தகுதிக்குத் தக்கபடி மரியாதைகளை அதிகார நந்தி முன்னின்று செய்தார். பத்மகிரீசர் தனது பார்யையான அபிராமா தேவியின் அங்கலக்ஷணங்களைக் கண்டு ஆனந்தங்கொண்டு அவளை முன்போல் தன் இடப்பாகத்தணைத்து விருஷபாரூடராய் யாவர்க்கும் காட்சியளித்து அவரவர் தமதிருப்பிடம் செல்லுமாறுபணித்து பத்மகிரிச் சிகரமான சூக்குமலிங்கத்தில்இறைவியோடு மறைந்தருளினார் வந்திருந்த அனைவரும் இதுவரை நாம் அடையாத வெற்றியை அடைந்ததாக இறும்பூதெய்தி அவரவர் தமதிருப்பிடம் சேர்ந்தனர் என்று இந்த பரமபாவனமான அபிராமா பத்மகிரீச விவாக மஹோத்சவத்தை பிரம்மா அகஸ்தியருக்கு எடுத்துச் சொன்னார். (இந்தத் திருக்கல்யாணம் சித்திரை மாதம் பௌர்ணமி திதி ஹஸ்த நக்ஷத்திரம் கடக லக்னத்தில் நடந்ததாக இப்புராணம் கூறுகின்றது.)

## 10-வது அத்தியாயம்

## வாருண தீர்த்த மகிமை.

திருக்கல்யாண விமர்சையைக் கேட்ட அகஸ்தியர் உடல் புளகாங்கிதமடைய கண்களில் ஆனந்தக்கண்ணீர் பொழிய பக்தி பரவசம் பெருக்கெடுத்தோட பிரம்மாவை நோக்கி சுவாமி! இதுவரை இத்தல மகிமையும், மூர்த்தி மகிமையும் கூறியதுபோல அடியேனுக்கு இந்த க்ஷேத்ரத்தின் தீர்த்த மகிமையும் சொல்ல வேண்டும்" என்று கேட்டார். அதன்படியே பிரம்மனும் சொல்லலுற்றார்.

கேளும் குடமுனியே ! பர்வதரூபமான இந்த மஹாலிங்கத்தின் மேல் தளத்தில் ஐந்து புண்ணிய தீர்த்தங்கள் உள. அவை 1. வாருணை தீர்த்தம். 2. கதம்ப தீர்த்தம். 3. சிவகங்கா தீர்த்தம். 4. பாண்டவ தீர்த்தம். 5. திரௌபதி தீர்த்தம் என்பனவாகும்.

அவைகளில் முதலாகச் சொல்லப்பட்ட வாருணை தீர்த்தம் என்பது வருணனால் நிர்மாணிக்கப்பட்டது. அந்தப் புண்ணிய தீர்த்தத்தை ஒருமுறை தரிசனம் செய்தாலே ஒருவன் சமஸ்த பாபங்களிலிருந்து விடுதலை அடைகின்றான். கிருதயுகத்தில் ஒரு சமயம் இந்திரலோகத்திலிருந்து தேவசபை கூடிற்று. அப்பொழுது இந்திரன் தன் பதவியில் கர்வம் கொண்டவனாய்ந் தன்னைவிட உயர்ந்தோர் இல்லையென பெருமைகொண்டு மற்ற தேவர்கள் மனங்கோணப் பேசினான். அதைக்கேட்ட வருணன், "தேவராஜனே ! உலகம் ஜீவிப்பது மழையால். அதைப் பெறவே ரிஷிகளும் மக்களும் யாகாதிகளைச் செய்கின்றனர். அவ்வாறு செய்யப்படும் யாகங்களில் அக்னியில் இடப்படும் ஹவிஸ்ஸே தேவர்களுக்கு உணவாகின்றது. நானில்லையேல் உலகில் யாதொன்றும் நடைபெறாது. ஆகவே நானே பெரியவன் என்று மார்பு தட்டினான். இருவருக்கும் வாய்ச்சண்டை முற்றி யுத்தத்தில் முடிந்தது. வருணன் படுதோல்வி அடைந்தான். தன்னுடைய சகல சம்பத்துக்களையும் இழந்தவனாய், மிக்க வறியவனாய், பிரம்ம தேவரிடம் சென்று தன்னுடைய நிலைமையைக் கூறினான். தனக்கு விமோசனம் ஏற்பட ஏதாவது வழியுண்டா என்று வினவினான். அதைக்கேட்ட பிரம்மா வருணன் மீது இரக்கங் கொண்டு நீ தக்ஷிணபூமி சென்று சென்று அங்குள்ள தாத்ரீ வனத்தையடைந்தால் அங்கே சிவபெருமானே மலைவடிவாய், லிங்காகாரமாய் "பத்மாசலம்" என்று பெயருடன் திகழ்கின்றார்.

என்று திருவாய் மலர்ந்தருளி மறைந்தார். வருணனும் இந்திரனும் முன்போல் நேசமாகி தமதிருப்பிடம் சென்றனர். அந்நாளிருந்து அந் நீர்நிலை வாருண தீர்த்தம் என்ற பெயர் தாங்கி தம்மில் மூழ்குபவர்களின் பாபங்களை அறவே போக்குகின்றது. அதில் மூழ்குவோர் இழந்த பதவியைத் திரும்பப் பெறுகிறார்கள். விரோதிகளும் நேசமாகின்றார்கள். வருணனும் ஆண்டுதோறும் மழைரூபமாக வந்து பத்மகிரி பர்வதத்தை அபிஷேகம் செய்து ஆராதித்து வருகின்றான்.

## 11-வது அத்தியாயம்

## கதம்ப தீர்த்த மகிமை

இனி இரண்டாவதாகக் கூறப்பட்ட கதம்ப தீர்த்தத்தின் மகிமையை பிரம்மா கூறினார். முன்னொரு காலத்தில் சததன்வா என்றொரு அரசன் மநு நீதி தவறாமல் அரசாண்டு வந்தான். அவனுடைய ராஜ்யத்தில் வேதசாஸ்த்திரங்களை நன்கு கற்றுணர்ந்தவனாயும், ஆசார சீலனாயும் சிவபெருமான் மீது இடையறா பக்தியுடையவனாயும், பஞ்சமஹாயக்ஞங்கள்[14] என்று கூறப்பட்டவற்றைத் தவறாது செய்பவனாயும் இருந்த 'த்ருடவிருதன்' என்று பெயருடைய ஓர் பிராம்மணோத்தமன் இருந்தான். அவன் மனைவி தர்மக்ஞை என்பாள் பர்த்தாவுக்கேற்ற பதிவிரதையாக விளங்கினாள். அவர்களுக்கு வெகு நாள் மக்கட்பேறில்லாமல் இருந்து பின்பு மூன்று புத்ரர்களை ஒரே கர்ப்பத்தில் பெற்றடுத்தார்கள். அவர்கள் பெயர் தண்டி, முண்டி, ஹரன் என்பன. அவர்களை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமாய் மிகச் செல்லமாக வளர்த்தார்கள். அப்புத்திரர்களுக்கு அவ்வகாலத்தில் செய்யப்பட வேண்டிய ஸ்மிருதி ஸம்ஸ்காரங்களை முறைப்படி செய்து உபநயனச் சடங்கு செய்வித்து வேதாத்யயனம் செய்ய ஏற்பாடு செய்தார்கள். அவர்களும் வேதங்களை நன்கு கற்றுணர்ந்தார்கள். அவர்களில் முண்டி என்பவன் யௌவனதசையடைந்தவனாய், பூர்வஜன்ம வினையினால் கர்முகனாய், ஆசாரஹீனனாய், வர்ணாச்ரமதர்மங்களை மீறியவனாய் குரு நிந்தனை, பெற்றோர் நிந்தனை, சிவநிந்தனை, அடியார் நிந்தனைகளைச் செய்பவனாய், ஸ்த்ரீலோலனாய்த் திரிந்தான். அன்னானின் துராச்சாரத்தைப் பொறுக்காத த்ருடவரதன் அவனை வீட்டை விட்டுத் துரத்தி விட்டான். அவனுடைய அட்டூழியம் மிதமிஞ்சிப்போக அரசனும் அவனை தேசபிரஷ்டம் செய்தான். பல ஊர்கள் சென்று தன் தீய நடத்தையால் பலரால் வெறுக்கப்பட்டவனாயும் விரட்டப்பட்டவனாயும், பல நாள் அங்குமிங்கும் திரிந்து கடைசியாக இந்த திண்டிமாபுரியை அடைந்தான். அங்கு பத்மகிரீசர் சன்னதியில் ஊழியம் செய்யும் தாசிகளில் மதன மோஹனா[15] என்பவள் மீது மோகம் கொண்டான். ஒரு நாள் இத்தாசிகள் மலை மீது இறைவன் வழிபாட்டுக்குச் சென்ற போது முண்டியும்

---

*[14] பஞ்சமஹாயக்ஞங்களாவன. ப்ரம்மயக்ஞம் அதாவது வேதம் ஓதுதல் ஓதுவித்தல் 2. தேவயக்ஞம் அதாவது வேட்டல், வேட்பித்தல் 3. பூதயக்ஞம் அதாவது அருவமான பூதங்களுக்கு வாயஸபலி போன்ற பலிதானம் செய்வது 4. பிதுர்யக்ஞம் அதாவது சிராத்தாதிகளை பிதுர்களுக்காகச் செய்வது 5. மனுஷ்யயக்ஞம் அதாவது அதிதிகளுக்கு அன்னமிடல். மனுஸ்மிருதி III 66.*

*[15] நம் நகர் அபிராமம்பிகை ஆலயத்தில் முண்டிக்கும் தேவதாசிக்கும் செப்பு விக்ரகங்கள் கருவூலத்தில் இருக்கின்றன. இவைகள் இப்பொழுது உபயோகத்தில் இல்லை. இவைகள் முறையே 9 அங்குலம் 7½ அங்குல உயரத்தில் இருக்கின்றன. சிறந்த பண்ணைய வேலைப் பாடமைந்தவை.*

# 12-வது அத்தியாயம்

## பாண்டவ தீர்த்த மகிமை

இனி மூன்றாவதாக பாண்டவ தீர்த்த மகிமையைச் சொல்லுற்றார். பாண்டவர் வனவாசம் செய்த காலத்தில் காடு மலை வனங்களெல்லாம் சுற்றித்திரிந்தார்கள். ஒரு நாள் தர்மபுத்திரன் தான் சூதாடி ராஜ்யத்தையிழந்து அவதிப்படுவதையும் தன் சகோதரர்களும், மனைவியும் படும் கஷ்டங்களை மனதில் நினைத்து மனசாந்தியில்லாமல் வியாகூலம் அடைந்திருந்தார். தங்களுக்குத் தோன்றாத் துணையாயிருக்கும் கிருஷ்ண பரமாத்மாவைத் தியானம் செய்தார். கிருஷ்ண பகவான் தர்மராஜன் முன் தோன்றி அவருடைய மன வியாகூலத்தை அறிந்து சொல்லுகின்றார் :– ஹே! யுதிஷ்டிரா! ஏன் கலங்குகிறாய்? நீ க்ஷத்ரியனல்லவா? சாதாரண மக்களைப் போல் மனம் கலங்குவது உன் அந்தஸ்துக்கும் அறிவுக்கும் பொருந்தாது. விதி யாரை விட்டது? அவரவர் செய்த வினையின் பயன்ன அனுபவித்தே தீர வேண்டும் என்ற நியதியை நீ அறிவாயா? உமது க்ஷேம காலம் சமீபித்து விட்டது. நீ இப்பொழுது வதியும் பிரதேசம் ஓர் புண்ணிய பூமி, இதற்கு தாத்ரீவனம் என்று பெயர். இங்கு கயிலாய பதியாகிய சிவபெருமானே தன் இச்சையால் ஓர் பத்மகர்ணிகையில் தோன்றி பத்மாசலமாக வளர்ந்து பர்வதாகாரமாகக் காட்சி அளிக்கிறார். அப்பர்வதத்தின் தரிசனமே சிவதரிசனமாகும். ஆகையால் நீயும் உன் சகோதரர்களும் உங்கள் தர்மபத்தினி திரௌபதியுடன் அவண் சென்று பத்ம புஷ்கரிணியில் நீராடி பத்ம பர்வதத்தை வலம் வந்து, பத்மகிரியான் சிகரமாநி குஷம் லிங்கசேவை செய்து அதன் உச்சியில் கோயில் கொண்டருளும் அபிராம சமேத பத்மகிரிநாதரை வாருணி தீர்த்தத்தால் அபிஷேகம் செய்து முறைப்படி ஆராதித்து வருவாயேல் நீங்கள் இழந்த ராஜ்யத்தைத் திரும்பப் பெற்று சுகமடைவீர்கள், பத்மலிங்க பிரதக்ஷிணத்தால் சத்ருஜயமும் சாம்ராஜ்ய பட்டாபிஷேகமும் கிட்டும், பத்மதீர்த்தத்தை அருந்துவதும், பத்மலிங்க தரிசனமும், பஞ்சாக்ஷரஜபமும் அநேக பிறவிகளில் செய்த புண்ணியத்தாலேயே கிடைக்கும். பத்மதீர்த்த ஸ்நானமானது கங்காஸ்நானத்தை விடமேலானது. எப்படியெனில் வருணன் பெற்றவரத்தால் அவன் மேகரூபம் கொண்டு ஆண்டுதோறும் பத்மகிரியின் சிகரத்தில் மழையாகப் பெய்து அபிஷேகம் செய்கின்றான். அந்த அபிஷேக ஜலம் பத்மகிரியின் மேல் தளத்திலுள்ள பஞ்ச தீர்த்தங்களிலும் கலந்து அம்மலையின் கிழக்குப் பக்கத்தில் வழிந்தோடி பத்ம புஷ்கரணியை நிரப்புகிறது. இறைவனின் சிரசில் பட்ட ஜலமாகையால் அது சர்வ பாபங்களையும் போக்கவல்லது. பத்மாசல க்ஷேத்ரத்தின் மகிமையை அறியாதவனுங்கூட அங்கு ஓர் இரவு தங்கவானாகில் அவன் ஸமஸ்தபாபங்களின்றும் உடனே விடுதலையடைகின்றான். அத்தலத்தின் மகிமையை அறிந்து அங்கு மூன்று தினங்கள் வசிப்பவன் ஸர்வாபீஷ்டங்களையும் அடைகிறான். சேரமன்னனாகிய தர்மபாலன் இந்த க்ஷேத்ரத்தில் வசித்து அபிராமாம்பிகைக்கும் பத்மகிரீசருக்கும் ஆலயம் கட்டி அவர்களை பிரதிஷ்டை செய்ததன் பலனாய் சிவலோத்தில் நித்ய வாழ்வை அனுபவித்து கொண்டிருக்கிறான். கார்த்திகைப் பெண்கள் அறுவரும் பத்மகிரி நாதரை வழிபட்டு வந்ததால் சாக்ஷாத் சண்முகப் பெருமானுக்கே பாலூட்டும் வாய்ப்பை அடைந்தனர். ஹிரண்ய கசிபுவை சம்ஹாரம் செய்த நரஹரி இந்த ஷேத்ரத்தில் வந்தே தன் பிரம்மஹத்திதோஷம் நீங்கப் பெற்றார். மஹாவிஷ்ணு இங்கு நித்ய வாசம் செய்ய வேண்டுமென்று கருதியே பத்மகிரியின் தாழ்வரையில் கோயில் கொண்டிருக்கின்றார். வருணன் பத்மகிரிசரை வழிபட்டு இழந்த பதவியைத் திரும்பப் பெற்றான். இதுபோல் இந்த தாத்ரீவனத்தில் வசித்து பத்மகிரிசரை வழிபட்டு மேன்மையடைந்தோர் பலர். ஆகவே நீங்களும் அங்கு

சென்று பத்மலோசனை வழிபடுங்கள். உங்கள் இன்னல்கள் விரைவில் கழிந்து இழந்த ராஜ்யத்தை யடைவீர்"என்றும் சொல்லிவிட்டுத் தமது இருப்பிடம் சென்றார். அவ்வாறே பாண்டவர்கள் சென்று கிரிபிரதக்ஷிணம் செய்து வரும்போது மேற்குப் பக்கத்தில் ஓர் குகை துவாரத்தைக் கண்டார்கள். அக்குகையில் தங்கி இரவைக் கழித்து வைகறையில் எழுந்து பத்ம புஷ்கரிணியில் நீராடி, கிரிவலம் வந்து, பர்வதத்தின் மேலேறி அங்குள்ள வாருண கதம்ப தீர்த்தங்களில் நீராடி, சூக்ஷுமலிங்க தரிசனம் செய்து, ஆலயம் சென்று பத்மகிரிநாதரை முறைப்படி வழிபட்டு பஞ்சாக்ஷர ஜபம் செய்து வந்தார்கள். இவ்வாறு ஒரு மண்டலம் நியமமாய் பக்தி சிரத்தையோடு ஆராதித்து வரும்போது ஓர் இரவில் தர்மராஜனின் கனவில் பத்மகிரிநாதர் தோன்றி அபயம் அளித்து "நீங்கள் யுத்தத்தில் வெற்றியடைந்து இழந்த ராஜ்யத்தைத் திரும்ப அடைவது மட்டுமேயன்றி ஏனைய அரசர்களும் உங்களுக்குக் கப்பம் செலுத்தும்படி சாம்ராஜ்யாதி பதிகளாக வாழ்வீர், கிருஷ்ணபரமாத்மாவின் சகாயம் உங்களுக்கு எப்பவும் இருக்கும்"என்றுசொல்லி மறைந்தார். காலையில் தருமர், இக்கனவைத் தன் சகோதரர்களிடம் கூறிக்கொண்டிருந்ததைக் கேட்ட திரௌபதி "ஆ! இதென்ன ஆச்சர்யம்! என் கனவில் ஸர்வாலங்கார பூஷிதையாய் ஓர் சுமங்கலி தோன்றி உங்களுக்குச் சொன்னவாறே சொல்லிப் போந்தாள்"என்றாள். அவ்வறுவரும் அபிராமாம்பிகை, பத்மகிரீசர் இவரின் கருணையை வியந்து அன்றும் என்றும் போல் ஆராதனை நடத்தினார். அப்போது பத்மகிரிநாதர் அவர்கள் முன்தோன்றிக் கனவில் கூறியதையே மறுபடியும் சொல்லி அபயமளித்து அனுக்ரஹம் செய்தார். அப்போது பாண்டவர்கள் "சுவாமி ! தாங்கள் தங்கியிருந்த குகையும், நாங்கள் நீராடிய தீர்த்தமும் எங்கள் பெயரால் விளங்க வேண்டும். அதில் நீராடுபவர்கள் சகல இன்னல்களும் அகன்றவர்களாக, என் கடாக்ஷ வீக்ஷண்யத்திற்கு இலக்காக வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார். இறைவனும் "அவ்வாறே ஆகுக" என்று கூறி மறைந்தார்.

## 13-வது அத்தியாயம்

## திரௌபதி தீர்த்த மகிமை

கேளும் அகஸ்தியரே! இவ்வாறு பத்மகிரீசனால் அனுக்ரஹம் செய்யப்பட்ட பாண்டவர்களும் திரௌபதியும், தாங்கள் தங்கியிருந்த குகையை விட்டு பத்மகிரியின் வடகிழக்கு பாரிசத்தில் ஓர் பர்ணசாலை அமைத்துக் கொண்டு சிலகாலம் இத்தலத்தில் தங்கினர். அப்பொழுது ஒரு நாள் தர்மபுத்திரர் திரௌபதியை நோக்கி "பிரியே1 ஓர் கிரஹமானது மேன்மையடைவதும், தாழ்மையடைவதும் "க்ரஹ்ணி" என்று சொல்லப்பட்ட இல்லாளின் தர்மா தர்மங்களைப் பொறுத்ததாக இருக்கின்றது. எந்த இல்லத்தில் பதிவிரதையாயும், பர்த்தாவின் மணங்கோணாமல் நடப்பவளாயும், ஆசாரசீலியாயும், தெய்வபக்தியுடையவளாயும், தன் மக்களைப் பெற்றவளாயும் விளங்கும் இல்லக்கிழத்தி வசிக்கின்றளோ அந்த இல்லத்தில் திருமகள் நித்யவாசம் செய்கின்றாள். அப்படியில்லாமல் ஆசாரஹீனையாய், தெய்வத்துக்கும் சத்தியத்துக்கும் அஞ்சாதவளாய், காமவிகாரம் பிடித்து, பர்த்தாவுக்கு அடங்காமல் வேசிபோல் திரியும் ஸ்திரீ இருக்கும் இல்லம் சகல நலன்களையும் இழந்து ஜ்யேஷ்டாதேவி குடியிருக்கும் இடமாவதுடன் அவள் வசிக்கும் நகரத்துக்கே கேடு சம்பவிக்கும். மேலும் புருஷன் ஆசாரஹீனனாயும் தீய ஒழுக்கங்கள் நிறைந்தவனையும் தெய்வபக்தி இல்லாதவனாயும் இருந்தபோதிலும்

அவனைத்திருத்தி நவ்வழிப்படுத்தும் பொறுப்பு அவனுடைய இல்லக்கிழத்தியின் கையில்தான் இருக்கின்றது" என்று இன்னும் பலவிதமாய் ஸ்திரீ தர்மங்களை எடுத்தோதி "நீ இத்தலத்தில் மஹா வரபிரசாதையாய் எழுந்தருளியிருக்கும் பராசக்தியே அபிராமா தேவியை உபாசித்து வருவாயாக" என்று கூறி அதற்கு வேண்டிய பூஜாவிதானத்தையும் உபதேசித்தார்.

அவ்வாறே திரௌபதியும், தன்பர்த்தாவின் ஆணைப்படி தினம் வைகறையில் எழுந்து பாண்டவ தீர்த்தத்தில் நீராடி, மடியுடுத்தி நெற்றியில் குங்கும திலகம் இட்டுக்கொண்டு, பூஜைக்கு வேண்டிய புஷ்பம், சந்தனம், மஞ்சள் முதலிய சகல பதார்த்தங்களையும் சேகரித்துக் கொண்டு அபிராமாம்பிகையின் சந்நிதியில் சுகாஸனத்தில் அமர்ந்து விநாயகரை தியானித்து நெற்றியில் ஐந்து முறை குட்டிக்கொண்டு கல்பம் மன்வந்தரம், யுகம் முதலியன அடங்கிய சங்கல்ப மந்திரத்தால் தனது இஷ்டார்த்த காம்யங்கள் நிறைவேற அருளும்படி சங்கல்பம் செய்து கொண்டு அம்பாளை பூஜை செய்ய ஆரம்பித்தாள். அம்பாளுக்கு ஆவாஹனம், [17] ஆஸனம், பாத்யம், அர்க்யம், ஆசமனம், அபிஷேகம் வஸ்த்ரம், யக்ஞோபவீதம், அலங்காரம் கந்தம், புஷ்பம், தூபம், தீபம், நைவேத்தியம், தாம்பூலம், கற்பூர நீராஞ்சனம், பிரதக்ஷிணம், நமஸ்காரம் முதலிய சகல உபசாரங்களையும் முறைப்படி அவ்வவற்றிற்குரிய மந்தரங்களாலும் கிரியைகளாலும், பாவனையாலும் செய்து முடிவில்

"அபிராமா சிர: பாது முகத்மபாதுத்ரிபுர ஸுந்தரி

பவானி நாஸிாம்பாது கர்ணௌ பத்மகீசீச்வரி"

என்று ஆரம்பிக்கும் அபிராமா ககவசத்தையும் சொல்லி வழிபட்டுக் கொண்டு வந்தாள்.

ஒரு நாள் திரௌபதி பூஜை முடிந்து, ஏகாக்ரமாய் தன் இருகண்களை மூடி தியானம் செய்து கொண்டிருக்கும்போது "திரௌபதீ உன்னுடைய பூஜையை ஏற்றுக் கொண்டோம், அதனால் மிக்கத் திருப்தியும் அடைந்தோம்" என்று எழுந்த வீணையைப்பழிக்கும் மதுரமான வாசகம் கேட்டு நிஷ்டை கலைந்து கண்விழித்துப் பார்த்தாள். தன்முன் திவ்யதேஜா மயமாய், ஸர்வாங்க ஸௌந்தர்ய ஸர்வாபரண பூஷிதையான ஸ்ரீ அபிராமாதேவி நிற்பதைப் பார்த்தாள். ஆச்சர்யத்தில் ஆழ்ந்தாள், மகிழ்ச்சியில் கருணைக்கு வியந்தாள். ஆடினாள், பாடினாள் கண்களில் ஆனந்த பாஷ்பம் பெருக மயிர்ச்சிலிர்ப்ப, அடியற்ற மரம்போல் தரையில் வீழ்ந்து வணங்கி, எழுந்து போற்றிப் பரவித் துதித்தாள். கருணை மாமுகிலான அபிராமாம்பிகை, அவளைப் பார்த்து "ஹே! பாண்டவபத்னி! நீ வேண்டுவது யாது?" எனக் கேட்டாள். அதற்கு திரௌபதி "தாயே! தயாபரீ! ஆதியே! பத்மகிரீசரின் பாதியே! பூர்வ ஜன்ம வினைப்பயனாய் நாங்கள் நாடிழந்து வன்வாசம் செய்கின்றோம். நாங்கள் இழந்த சம்பத்தைத் திரும்பப் பெற அனுக்ரஹிக்க வேண்டும். மேலும் நாங்கள் தினந்தோறும் உனது திருமேனிக்கு அபிஷேகம் செய்து உன் பாதார விந்தங்களின் வழியாக வழிந்த மஞ்சள் நிறத் தீர்த்தத்தை நாங்கள் வசித்து வந்த குகையில் சேகரித்து வைத்திருக்கிறோம். அது என்றும் வற்றாமல், அதைத் தமது தலையில் புரோக்ஷணம் செய்து கொள்கிறவர்கள் கோரிய வரத்தை அவர்களுக்கு நீ அருளல் வேண்டும். முக்கியமாய் ஸ்திரீகளுக்கு மாங்கல்ய விருத்தியைக் கொடுக்க வேண்டும். அந்தத் தீர்த்தம் என் பெயரால் வழங்கி வர வேண்டும்"

---

*[17] மூலத்தில் இங்கு கூறப்பட்ட ஒவ்வொரு உபசாரத்துக்கும் ஏற்ற மந்த்ரசுலோகங்கள் வடமொழியில் கூறப்பட்டிருக்கின்றன. இறுதியில் "அபிராமா கவச மந்த்ரமும்" கொடுக்கப்பட்டிருக்கின்றது. அவற்றை இட வசதியைக் கருதி ஈண்டு கொடுக்கவில்லை.*

என்று அடிபணிந்து பிரார்த்தித்தாள். அவ்வாறே அபிராமாதேவியும் அனுக்ரஹித்து மறைந்தாள் என்று பிரம்மன் அகத்தியருக்குக் கூறி மேலும் சொல்லலுற்றார்" கேளும் கும்பஜ! இந்த திரௌபதீ தீர்த்தத்தின் மகிமைக்கு ஈரேழு பதினான்கு உலகங்களில் இருக்கும் தீர்த்தங்களும் சமானமாகா. இந்த தீர்த்தத்தை ஒரு முறை தமது தலையில் தெளித்துக்கொண்டதாலே ஸ்திரீகள் மலட்டுத் தன்மை நீங்கி சத்புத்ர பேறு அடைவர் அஷ்டைச்வர்யங்களையும் அடைவர். ஊழின் பெருவலியால் வைதவ்யம் உண்டாக கூடிய நிலையில் இருக்கும் ஸ்திரீகளும் மாங்கல்ய விருத்தியடைகின்றனர். மேலும் நான் உமக்குச் சொன்ன இந்த அபிராமா கவச மந்தரம் மிகுந்த மகிமை வாய்ந்தது. அதிரஹஸ்யமானது அதற்கு ரிஷிதக்ஷிணாமூர்த்தி, அனுஷ்டுப் சந்தஸ், அபிராமா தேவதை என்பதையும் அறிந்து கொள். ஏனெனில் ரிஷி, சந்தஸ், தேவதை என்ற மூன்று வியாகிருதிகளைத் தெரியாமலும், அங்கந்நியாஸம், கரந்நியாஸம் செய்யாமலும் ஜபிக்கப்படும் மந்தரம் சாம்பலில் பெய்த நெய்போல் பலனையளிக்காது. அபிராமாம்பிகையே மஹாதிரிபுரஸுந்தரீயாகையால் அவளை "ஸுதாஸிந்தோ"[18] என்ற சுலோகத்தால் தியானம் செய்ய வேண்டும் என்று உபதேசித்தார்.

## 14-வது அத்தியாயம்

## சிவகங்கா தீர்த்த மகிமை

பிரம்மா மேலும் தொடர்ந்து சொல்லுகின்றார். அபிராமாம்பிகைக்கும் பத்மகிரி நாதருக்கும் விவாஹமஹோத்சவம் நடந்தேறிய பின் அதைக் காண வந்த தேவர்கள் தத்தம் இருப்பிடம் சென்றனர். பத்மகிரிநாதர் அபிராமா தேவியின் அங்கலக்ஷணங்களில் மனதைப் பறிகொடுத்தவராய் அவள் வரவை எதிர்நோக்கிப் பள்ளியறையில் வீற்றிருந்தார். அம்பிகையோ நாணத்தால் அவர் பக்கம் எழுந்தருளத் தயங்கினாள். அம்பாளின் யோகினிகளில் சிலர் அவளைத் தேற்றுவித்தும் பயனில்லாமல் போகவே பர்வதராஜன் பத்தினியான மேனையிடம் சென்று கூறினார். மேனையும் தனது புத்திரியை அன்புடன் அணைத்து உச்சிமோந்து ஸ்திரீ தர்மங்களை எடுத்துச் சொல்லி யோகினிகளைக் கொண்டு அலங்காரம் செய்வித்து பத்மகிரிநாதரின் சயனக்ரஹத்துக்கு அழைத்துச் சென்றாள்.

இறைவனே இவள்பால் ஒரு திருவிளையாட்டைச் செய்ய சங்கல்பித்து தனது ஜடாமகுடத்தில் இருக்கும் கங்கா தேவியைப் பெண்ணுருவாக்கித் தன் பக்கத்தில் அமரச் செய்து உல்லாஸமாகப் பேசிக்கொண்டிருந்தார். அபிராமா தேவி இதனைக் கண்டு வருத்தமும் கோபமும் கொண்டு சயன அறையை விட்டு வெளியேறினாள். இதனைக் கண்ட கங்காதேவி ஓடோடி வந்து அபிராமாவின் திருக்கரங்களைப் பற்றி தன்னுடைய விருத்தாந்தத்தையும் தத்துவத்தையும் எடுத்துச் சொல்லி, " விவகாரதசையில் லோகோபாகாரமாக இறைவன் செய்த திருவிளையாட்டே இது. நீ வருந்தல்வேண்டாம். வா" என்று திரும்பப் பள்ளியறைக்கு அழைத்துச் சென்றாள். ஆனால் அபிராமா தேவியின் ஊடல் தணியவில்லை. அதனைக்கண்ட இறைவன் கங்கையைப் பார்த்து

---

(18) *இந்ததியான சுலோகம் ஆதி சங்கரபவகத் பாதாள் செய்த ஸௌந்தர்யலஹரீ என்ற கிரந்தத்தின் 8-வது சுலோகம். அந்தகிந்தத்தின் முதல் 41 சுலோகங்களை பகவத்பாதாள் கைலாஸத்திலிருந்து எடுத்துக்கொண்டு வந்தார் என்பது ஐதிஹ்யம் ஆசிரியர்.*

"அபிராமா என்னுடன் ஏகாந்தமாயிருக்கப் பிரியப்படுகிறாள் நீ சற்று வெளியே உலாவச் சென்று வா" என்று கூற கங்கையும் இங்கிதம் அறிந்தும் இறைவனின் திருவுளத்தில் இந்நெல்லிவனத்தில் மற்றொரு புண்ணிய நீர் நிலையுண்டு பண்ண வேண்டும் என்ற உள்ளக்கிடக்கை யையும் அறிந்தும், அவ்வாறே சயனக்கிரஹத்தை விட்டுக் கிளம்பி, தன்னில் மூழ்குவோரின் சகலபாவங்களையும் போக்கவல்ல சொர்ண மயமான தீர்த்த சொரூபத்தோடு பிலத்தில் பாய்ந்து அந்தர் வாஹினியாய் எவர்கண்ணுக்கும் தெரியாதபடி பிரவஹித்து, பத்மகிரியின் தென்மேற்கு பாகத்தில் ஓர் சிறு ஊற்றாக வெளிக் கிளம்பி, கொஞ்சதூரம் மேற்கே சென்று கும்பநதியில் சங்கமமானாள். மேலும் இவள் ஐந்து தடாகங்களில் தங்கிச் சென்றளாகையாலோ 'பஞ்சங்கா தீர்த்தம்" என்றும், சிவாக்ஞையால் இந்நெல்லிவன ஷேத்திரத்தை பாவனமாக்கினாதலாலே "சிவகங்கை தீர்த்தம்" என்றுப் பெயர் பெற்றது.

## 15-ம் அத்தியாயம்

## பத்மபுஷ்கரணி தீர்த்த மகிமை (19)

பிரம்மா சொல்லுகின்றார், "கேளும் கும்ப முனிவரே! பத்மபுஷ்கரணியின் மகிமையைச் சொல்வது. அவ்வளவு எளிதல்ல. அது மஹாரஹஸ்யமானது. ஆயினும் உன்மீது கொண்ட அன்பாலும், உலகக்ஷேமத்தின் பொருட்டும் சுருக்கமாகச் சொல்லுகிறேன். கேளும்"

முன்பு மஹாபிரளயம் உண்டாவதற்கு முந்தி ஏகா தசருத்ரர்கள் இறைவன் ஆக்ஞையால் தோன்றி சிருஷ்டிக்க பட்ட சர்வத்தையும் சம்ஹரித்தார்கள். அவைகள் யாவும் பஞ்சபூதங்களாய் எஞ்சின. அவையும், பிரதிவி அப்புவிலும், அப்பு தேயுவிலும் தேயுவாயுவிலும், வாயு ஆகாசத்திலும் ஒடுங்கின.

ஆகாயதத்துவம் அஹங்காரதத்துவத்தில் ஒடுங்கியது. அஹங்காரதத்துவம் மஹத்தத்துவத்தில் ஒடுங்கியது. அம்மஹத்தத்துவம் அவ்யக்கத்தில் அந்தர்த்தமானது. அவ்யக்தம் ப்ரம்மத்தில் லயமானது. ஆகவே பிரளயத்தில் எஞ்சி நின்றது எங்கும் வியாபகமாயும், சாஸ்வதமாயும் சுத்தநிற்குண சைதன்ய ப்ரம்மமே. அந்த ப்ரம்மத்தில் அக்னியில் சூடுபோல அபின்னமான சக்தி ஒடுங்கிக்கிடந்தது. பின்பு உயிர்களின் வினைக்கீடாக சிருஷ்டி தொடங்க வேண்டிய காலம் வந்தபோது பிரம்மத்தினின்றும் சக்திஸ்புரித்தது. சக்திவேறாயும் பிரம்மம் வேறாயும் இரண்டு கூறுகளான போது சக்தி "மாயா" என்ற பெயர் பெற்றது மாயையினின்றும், பிரம்மத்தின் அதிஷ்டானத்தால் ஸத்வ, ரஜஸ், தமோ குணங்கள் உண்டாயின. ஆகவே நிரூபாதிக ஸம்வித்ரூபமாய் இருந்த பிரம்மம் இப்பொழுது, குணம், காலம், நியதி, திசை முதலியனவற்றோடு கனமாக விரிந்தது கடைசியாக சப்ததன் மாத்திரையும் அதனின்று ஆகாசமும் தோன்றிற்று. ஆகாசத்தினின்று ஸ்பர்சதன் மாத்திரை தோன்றி வாயுவாக பரிணமித்தது வாயுவினின்றும் ரூபதன் மாத்திரை தோன்றி தேயுவாகவிரிந்து, தேயுவின்றும் ரஸதன் மாத்திரை தோன்றி அப்புவாக மாறிற்று. அப்புவினின்றும் கந்ததன்

(19) மூல கிரந்தத்தில் இது 16-ம் அத்தியாயமாக இருக்கின்றது. இதில் இந்தத்தல புராணத்துவம் நன்கு விளக்கப்படுகிறது. அந்த தத்துவத்தை சுருக்கி இங்கு தரப்படுகின்றது. வேதாகமரஹசியங்களை தெளிவாயும் விளக்கமாகவும் கொடுக்கப்பட்டிருப்பதால் இந்த அத்தியாயம் இந்தப் புராணத்துக்கே சிரோரத்னமாக விளங்குகின்றது. நேயர்கள் இந்த அத்தியாயத்தை அதிக கவனமாய்ப் படித்துச் சிந்திக்கும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள் -- ஆசிரியர்.

மாத்திரை தோன்றி பிரதி வியாக்கனத்தை அடைந்தது. [20] பிருதிவியல் ஏனைய பூதங்களின் தன்மாத்ரைகளும் சேர்ந்திருக்குமாதலாலே, ஆகாசத்தில் ஒன்றும், வாயுவில் இரண்டும், அக்னியில் மூன்றும், அப்புவில் நான்கும், ப்ருதிவியில் ஐந்தும் ஆக பதினைந்து, தன் மாத்திரைகளின் சமஷ்டி பிரதிவியாகின்றது. இந்தத்தன் மாத்திரைகளின் பஞ்சீகரணமே பிரபஞ்சம் என்ற தோற்றமுடையதாய்க் காணப்படுகின்றது. எதினின்றும் எல்லாம் தோன்றி, எதில் லயமடைகின்றதோ அதுவே மாயா என்ற இரண்டு எழுத்துக்களால் குறிக்கப்படுகின்றது. இந்த மாயா சம்பந்தப்பட்ட பிருதிவியே "பத்மம்" என்று கூறப்பட்டது. மாயையை ஜகன் மாதாவாகி உலகத்தைப் படைத்து ரக்ஷிப்பதால் அவளை "தாத்ரி" என்ற சொல்லால் அழைக்கின்றோம். அவளால் வியாபிக்கப்பட்ட பிரதேசத்தையே தாத்ரிவனம் என்று கூறுகிறோம். அவளால் உண்டாக்கப்பட்ட பூமியும் பத்மம்போல் இருப்பதால் இந்த பிரதேசத்துக்கு பத்மக்ஷேத்ரம் என்று பெயர் உண்டானது. பிருதிவீதத்துவமானது அப்பு தத்துவத்திலிருந்தே தோன்றுவதால் அதனை பத்ம தீர்த்தத்தில் அவிர்பவித்ததாகச் சொல்லப்பட்டது. மாயையின் அதிஷ்டானத்தால் படிப்படியாய் கனமாக விரிந்த இந்நத பிரபஞ்சத்துக்கு சுத்தசை தன்யமான ப்ரம்ஹமமே உயிர். அவராலேயே இயக்கப்படுவதால் அவனை இயவுள், அதாவது உள்ளிருந்து இயக்குபவன் என்ற பெயரால் பெரியோர் அழைக்கின்றனர்.

ஆகவே பத்ம புஷ்கரணிய்ல தோன்றிய ஆயிரம் இதழ்த் தாமரையின் நடுவில் மகரந்த சிலும்புகளால் சூழப்பட்ட கர்ணிகையால் இறைவன் ஆவிர்பவித்தார் என்றும் அந்தக் காயானது ஓங்கி விரிந்து வளர்ந்தது என்றும் அதுவே பத்மகிரியென்றும் கூறுவதின் ரஹஸ்யார்த்தம் இது தான். இறைவனே ஆவிர்பவித்த நீர் நிலையாகையாலே, அந்த பத்ம புஷ்கரணியின் பெருமை எவ்வாறு இயம்புவது. பிரபஞ்சம் தோன்று முன் பஞ்சீகிருதாமாகிற (அதாவது பஞ்ச தன்மாத்திரைகளின் சமஷ்டியாகிற) பிருதிவியின் கர்ப்ப ஸ்நானம்போல், விளங்குவதால், அந்த பத்மதீர்த்தமே பிரபஞ்ச உற்பத்திக்குக் காரணம் என்று கூறுவதில் என்ன சந்தேகம்! அந்த பத்ம புஷ்கரணியின் நடுவில் பிரதிவிதத்துவமே பத்மமாகத் தோன்ற, அதன் கேந்திரஸ்தானத்தில் கௌரியாகிற மஹாமாயையும், சுத்தசைதன்ய மான பிரம்ஹமும் ஆவிர்பவித்து சகல புவன சிருஷ்டி காரண வஸ்துவாய் இருந்தனர். இந்த உண்மையைத்தான் சாக்ஷுஸ பிரம்மா அங்கு வந்ததாயும், அவருக்கு கௌரீ மனோஹரன் காட்சியளித்ததாயும் புராணம் உருவகமாகக் கூறுகின்றது. முன்பே சொன்னபடி இது அதிரஹஸ்யமானது. சிறந்த ஞானிகளுக்கேயன்றி பிறருக்கு இது லகுவில் விளங்காது. இவ்வாறு பத்மாசலமாய்த் தோன்றிய ஆதிதம்பதிகள், சிருஷ்டிக் கிரமத்தில் பிரதிவினின்றும் ஓஷதி களான மரம், செடி, கொடிகள் பரிணமிக்க வேண்டிய அவசரத்தில் அவர்கள் இருவரும் அந்த பத்மகிரிச் சாரலில், பத்ம புஷ்கரணின் வடக்குக் கரையில் இரண்டு அச்வத்த விருஷங்களாக (அரசமரங்களாகத்) தோன்றினர். அவ்விரண்டு விருஷங்களில் பராசக்தியின் அம்ஸமான அரசமரத்தினடியில், மஹாகாளி என்று பிரசித்தமான பத்ம

---

*[20] ஈண்டு தைத்ரீய உபநிஷத் பிரம்மாண்ட வல்லி முதலாவது அனுவாகத்தில் வரும்*

*"தஸ்மத்வா ஏதஸ்மாதாத்மன ஆகாச : ஸம்பூத: ! ஆகாசாத்வாயு வாயோரக்னி: ! அக்னேராப: ! அத்ப்ய ! ப்ருதுவி ! ப்ரதிவ்யா ஓஷதய : ! என்ற சுருதிவாக்கு ஒப்பு நோக்கத்தகுந்தது.*

தீர்த்தத்தின் ஆதிஷ்டான தேவதை [21] இன்றும் சகலமக்களாலும் பூஜிக்கப்பட்டு மஹாசக்தி வாய்ந்து விளங்குகிறாள்.

இரண்டு மரங்களில் சிவாஸ்மான மற்றொரு மரத்தின் பெருமையை அளவிட முடியாது. பத்ம தீர்த்தத்தில் நீராடி, இந்தஅரசமரத்தை சேவித்தால் சர்வாபீஷ்டங்களும் நிறைவேறும். இந்த அரசமரத்தின் அடிபாகம் பிரம்மாவென்றும்

மத்யபாமம் விஷ்ணுவென்றும், மேல்பாகம் ருத்ரன் என்றும், அதன் கிளைகள், இல்லைகள், புஷ்பங்கள், காய்கள் ருக், யஜுர், ஸாம, அதர்வண வேதங்கள் என்றும் வித்வான்கள் சொல்லுகிறார்கள். அதில் தேவர்களும், ரிஷிகளும், சித்தர்களும் எப்போதும் வாசம் செய்கின்றார்கள். பிரதிவீதத்துவமானது. பின்பு ஒஷதிகள் என்று சொல்லப்பட்ட மரம், செடி, கொடிகளில் முதன் முதலாகத் தோன்றியது. அச்வத்த விருக்ஷ மாகையாலே இதை "ஆதிவிருக்ஷம்" என்று புராணங்களில் கூறப்படுகின்றது. அதன் நிழல் பட்ட மாத்திரத்தில் ஒருவன் ஜீவன் முக்தனாகின்றான். அதனடியிலிருந்து காயத்ரீஜபமோ, பஞ்சாக்ஷர ஜபமோ செய்கிறவர்கள், அதிசீக்கிரத்தில் மந்த்ர சித்தியடைகின்றனர். அதனடியிலிருந்து தவம் செய்கிறவர்களை விட்டுக் குரோதாதிகள் உடனே அகல்கின்றன. அவர்களுடைய அஞ்ஞான இருள் நீங்கி மெஞ்ஞானம் உண்டாகின்றன. சாமான்ய ஜனங்களும் கூட அதன் நிழலில் தங்கினால் அவர்களைப் பற்றியிருக்கும் உடல் பிணிகள் நீங்கிவிடுகின்றன. அச்வத்த விருக்ஷத்தின் காற்றுப் பட்டாலும் மலட்டுத்தன்மை நீங்கும். அம்மரத்தை பத்ம தீர்த்தத்தால் அபிஷேகம் செய்கிறவர்கள், இந்த லோகத்தில் சகல சம்பத்தையும் அடைகிறார்கள். இறந்தபின் சொர்க்காதி போகங்களை அனுபவிக்கின்றார்கள்.

இன்னமும் கேள்! கும்பமுனியே! இப்படி பத்ம தீர்த்தத்தாலும் அச்வத்த விருக்ஷங்களாலும் பரிசுத்தமாக்கப்பட்ட இப்புண்ணியத் தலத்தில் தேவசேனா பதியான கார்த்திகேயன், சக்தி ஆயுதத்தைக் கையில் தாங்கி, பத்மகிரியின் கர்ப்பத்தில் (குகையில்) வசிக்கும் தேவர்களுக்கும், ரிஷிகளுக்கும், சித்தர்களுக்கும் பாதுகாப்பாக ஸ்ரீபத்மாசலேசனின் ஆணையால், கிழக்கு திக்கில் உள்ள பிலத்துவாரத்தில் நித்தியவாசமும் செய்து கொண்டு சத்ருக்களுக்கு பயத்தை உண்டாக்கும்படி அதிஉக்ரமாய் விளங்குகிறார். அவ்விதமே தக்ஷயாகத்தையளிக்க இறைவனால் தோற்றுவிக்கப்பட்ட அகோர வீரபத்ரர் தம்து கரங்களில் நானாவித ஆயுதங்களை தாங்கி பத்மகிரியின்தெற்கு மேற்குப்பக்கங்களிலும் அப்பர்வதத்தின் மேல்தளத்தில் உள்ள பிலத்துவாரத்தையும் காவல் புரிந்து வருகின்றார்.

மேலும் பத்மாசலமானது இறைவனுடைய அருவுருவத்திரு மேனியாக இருப்பதாலும், அதன் மகிமையை கானம் செய்கின்றவர்களைக் காப்பாற்றும் தன்மை பெற்றிருப்பதாலும் அதற்கு காயத்ரீகிரி என்ற திருநாமமுண்டு. நான்கு பக்கங்களும் முகம் இருப்பதாலும் சிகரத்தில் லிங்க சொரூபமாய் பரமேச்வரன் எழுந்தருளியிருப்பதாலும் இதற்கு "பஞ்சப்ரம்ஹகிரி" என்றும் பெயர் வழங்கி

*[21] இந்த தேவதை இன்றும் பத்மகிரியின் வடக்கு திக்கில் செல்லாண்டியம்மன், என்ற பெயரில் துர்க்கா பரமேச்வரியாக எழுந்தருளியிருக்கின்றாள். இக்காலத்திலும் அபிராமா பத்மகிரீசரின் பெருவிழா சித்திரை மாதத்தில் ஆரம்பமாகும் முன், இந்த செல்லாண்டியம்மன் ஆலயம் சென்று காப்புக் கட்டி ஆராதனை நடத்திய பின்பே துவஜாரோகணம் ஆகின்றது என்பது கவனிக்கத்தக்கது. இந்த துர்க்காலயம் காளஹஸ்தீச்வர ஸ்வாமி தேவஸ்தானத்தின் உட்கோயிலாக இருந்து வருகின்றது. இந்த ஆலயம் இருக்கும் பகுதி தான் செல்லாண்டியம்மன் கோயில் தெரு என்று அழைக்கப்படுகிறது - ஆசிரியர்.*

சித்தியை ஒருவன் அடைகிறான், மந்த்ரோபஸனையால் உபாஸகன் அந்த மந்த்ரத்தால் குறிக்கப்படும் தேவதா சொரூபத்தையடைகிறான் என்பது சாஸ்த்திரப் பிரமாணமான படியாலே லிங்காகாரமாய் இருக்கும் பர்வதத்தையே சாக்ஷாத் சிவபெருமானாக பாவித்து பஞ்சாக்ஷர உபாஸனை செய்து வந்தால் அவன் சிவனே ஆகின்றான்

விசேஷமாய் கிருத்திகா ஸோமவாரங்ககளிலும் ஜன்ம நக்ஷத்திர தினங்களிலும், அமாவசையுடன் சேர்ந்த சனி, ஞாயிற்றுக்கிழமைகளிலும், கிருஷ்ணபக்ஷம் சதுர்த்தசியுடன் சேர்ந்த செவ்வாய்க்கிழமைகளிலும், யுகாதி புண்ணிய காலங்களிலும் (வருஷப்பிறப்பு) பத்ம தீர்த்த ஸ்நானம், பத்மகிரிநாதர் தரிசனம், பத்மகிரிபிரதக்ஷிணம், அச்வத்த விருக்ஷ சேவை செய்கிறவர்களுக்கு நவகிரஹங்களால் ஏற்படும் தோஷங்கள் நிவர்த்தியாகின்றன.

காந்தமலைக்கு மேற்கு பன்றிமலைக்குக் கிழக்கு, சிறுமலைக்கு வடக்கு, காளிகா கோஷ்டத்துக்குத் தெற்கு, இந்த நான்கு எல்லைக்குள் இருக்கும் ஐந்து குரோச விஸ்தீரணமுள்ள பிரதேசத்துக்குப் பத்மக்ஷேத்திரம் என்று பெயர் (ஒரு குரோசம் என்பது சுமார் இரண்டுமைல்)

அகஸ்திய முனியே! இந்த ஸ்தலம் மஹா புண்ணிய க்ஷேத்ரமாகும். பரப்பிரம்ஹமே இவ்விடம் மலையுருக்குக் கொண்டு நிற்பதாலும் "தாத்ரீ" என்ற பராசக்தியும் அவனுடன் அந்தர் கதமாய் இருப்பதாலும், இறைவனின் அஷ்ட மூர்த்தங்கள் என்று கூறப்படுகின்ற பிரதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், சூரியன், சந்திரன், இயமானன் ஆகியவர்கள் இந்தப் பர்வதத்தின் எட்டு திக்குகளிலும் இருப்பதாலும், அந்த ஸ்தலத்தில் மகிமை அளவிடற்கரியது. மேலும் சந்தானவர்த்தினி என்ற நதியும் கும்ப நதியும், கங்கை, யமுனை போன்று இந்ததலத்தை அலங்கரிக்கின்றன.

எவனொருவன் இந்த அத்யாயத்தை மட்டும், அதிகாலையில் எழுந்து, நித்யகார்மானுஷ்டானங்களை முடித்துக் கொண்டு பாராயணம் செய்து வருகிறானோ அவனுக்கு அபிரமாமேத பத்மாசலேசனின் திருவருளால் சகலாபீஷ்டங்களும் நிறைவேறப்பட்டவனாய் மானிடருள் சிறந்தவனாய் விளங்குவான். இதில் ஐயமில்லை என்று பிரம்மா அகஸ்தியருக்குச் சொன்னார்.

## 16-ம் அத்தியாயம்

## கும்பநதி மகிமை (22)

இவ்வாறு சொல்லக் கேட்ட கும்பஜர் பிரம்மாவை நோக்கி "ஹே பத்மஜ! கும்பநதி சந்தானவர்த்தினி என்ற நதிகளின் வரலாற்றையும் சொல்ல வேண்டும் என்று பிரார்த்திக்க பிரம்மா கூறத்தொடங்கினார். அகஸ்திய முனிவரே! நீரல்லவோ கிருதார்த்தர்! இதுவரையாரும் இத்தனை லோகக்ஷேமமான பிரச்சனையைச் செய்ததில்லை. நீர் ஸத்பாத்திரமாக இருப்பதால் இதனைக்கேட்டீர். நானும் சகல ஜீவராசிகளும் கடைதேறும் பொருட்டு கும்பநதியின் மகிமையைச் சொல்லுகிறேன். கும்பநதியின் பெருமையைக்கூறும் சுலோகங்களில் ஒன்றேனும் அல்லது அதில் ஒரு பாதியேனும் பாராயணம் செய்து வருகின்றவன் மகா பாக்கியசாலியாக விளங்குகிறான். மானிடப்பிறவி எடுத்த

*(22) மூலத்தில் கும்பநதி வரலாறு (18ம் அத்தியாயம்) சந்தானவர்த்தினி நதியின் வரலாற்றுக்கு (17ம் அத்தியாயம்) பின்னால் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதை இங்கு மாற்றி அமைத்திருக்கிறேன். ஆசிரியர்*

எவனும் நீராடுவதாலேயே தேவனாகின்றான், அஞ்ஞானத்தால் ப்ரம்மஹத்தி செய்தவனும், சுரகபானம் பண்ணுகிறவனும், ஸ்திரீஹத்தி செய்தவனும், பரஸ்திரீகமனம் பண்ணினவனும் இந்நதியில் மூழ்குவதால் பாபவிமோசனம் அடைகின்றான். அந்நதியில் வைகறையில் நீராடுகின்றவனுக்கு அன்றன்று செய்யும் பாபங்கள் நசிந்துவிடுகின்றன. கும்பநதி தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து தனது சக்திக்குத் தகுந்தவாறு வேதாத்தயயணம் நன்கு செய்த பிராம்மண சிரேஷ்டனுக்கு அதன் கரையில் ஏதாவது தானம் செய்வானாயின் அவன் மஹத்தான பலன்களையடைகிறான். அதிலும் கிரஹணகாலங்களில், சங்கிராந்தங்களிலும் , விஷுபுண்ணிய காலங்களிலும் கும்பநதியில் நீராடி அதன் கரையில் ஒரு காசாவது தானம் செய்வானேயாகில் அவன் செய்த சகல பாபங்களும் அவனைவிட்டு விலகி விடுகின்றன. அந்நதிகரையில் அந்நதியின் நீரால் சமைக்கப்பட்ட அன்னத்தை உத்தமமான பிராம்மணனுக்கு அளித்தானாயின், அவன் கயாக்ஷேத்ரத்தில் லட்சபிராம்மணபோஜனம் செய்வித்த பலனையடைகின்றான். அந்நீரினால் பிதுர்க்களை உத்தேசித்து திலதர்ப்பணம் செய்தால் பிதிர் தேவதைகள் திருப்தியடைந்து அவனுக்கு ஆசிவழங்குகிறார்கள். கும்பநதிக்கரையில் பிராம்மண ஸமாராதனை நடத்தி வைக்கிறவன் இந்த லோகத்தில் அஷ்டஐச்வர்யங்கயையும் [23] அடைந்து குபேரன்போல் வாழ்ந்து, மரித்தபின் சொர்க்கலோகம் சென்று இந்திரன் போல் போகபாக்கியங் களையடைகிறான். பிரம்மணர்களில் பத்துவிதமுண்டு. 1. ரிஷிப் பிராம்மணன், 2. பிராம்மணப்ராமணன் 3. க்ஷத்திரியபிராம்மணன், 4. வைசியப் பிராம்மணன், 5. சூத்திரயப் பிராம்மணன், 6. சண்டாளப் பிராம்மணன், 7. பைசாசப் பிராம்மணன், 8. பைடால பிராம்மணன் (ஜாதியிலிருந்து நீக்கப்பட்டவன், பிரஷ்டன்) 9. ராக்ஷஸப் பிராம்மணன், 10. யாவனப் பிராம்மணன் (மிலேச்சன்) இவர்களில் தகுதியுள்ளவன் தகுதியில்லாதவன் என்று தாரதம்மியம் பார்க்க வேண்டியதில்லை. ஏனெனில் பசித்தவன் எவனாயினும் அவனுக்கு அன்னமளிக்க வேண்டுமல்லவா? இம்மாதிரி பிராம்மண போஜனம் செய்விப்பவன் முன் சொன்னது போல் இம்மை மறுமைப் பயன்களையடைகிறான்.

இனி இந்த நதி உண்டான விருத்தாந்தைக் கேளும் ; முன்னொரு காலத்தில் பிரம்மாவின் மானஸ புத்திரரான நாரதரின் சிஷ்யரான "சித்தயோகி" என்று ஒருவர் இருந்தார். அவர் வராக பர்வதத்தில் யோக நித்திரையில் ஆழ்ந்து பல காலம் பிரம்மாவை நோக்கித் தவம் இயற்றினார். பிரம்மாவும் அவர் முன் தோன்றி உனக்கு வேண்டும் வரம் யாது? என வினவினான். சித்தயோகி "ஸ்வாமீ! இப்பிறவிப் பெருங்கடலில் மீண்டும் வீழாது நித்தியானந்த வாழ்வாகின்ற முக்தியையே நான் விரும்புகிறேன். அதை நல்க வேண்டும் என்று கேட்க, பிரம்மாவானவர், "அப்பா! சித்தயோகி, முக்தியளிக்க வல்லவன் அம்முக்கண் முதலேயன்றி எம்மனாரால் முடியுமோ ஆனால் அதையடைய நான் ஒரு சுலபமான வழியொன்று சொல்லுகிறேன் கேள் ! இதோ என்கையில் இருக்கும் கமண்டலத்தில் வ்ராஜா தீர்த்தம், மானஸதீர்த்தம், ஆகாயகங்கை போன்ற எல்லா புண்ணிய நதிகளும் எப்பொழுதும் சான்னித்யமாய் இருக்கின்றன. இந்த கமண்டலத்தை வராஹபர்வதத்தில் பிரதிஷ்டை செய்து அதில் அடங்கியிருக்கின்ற தீர்த்தங்களின் அதிதேவதைகளை பிரார்த்திப் பீராகில் அக்கமண்டலத்தினின்று புண்ய தீர்த்தங்கள் ஒன்றுகூடி ஓர் திவ்ய நதியாக வெளிவரும். அது எனது கமண்டலத்தினின்றும் வெளிவருவதால் கும்பநதி என்று பெயரையடையும். அந்த நதியில் நீராடி ஒரு மண்டலம் பத்மாசலேசனை முறைப்படி ஆவாஹனம் முதல் பிரதக்ஷிண நமஸ்காரம் வரையில் சகல உபசாரங்களையும் செய்து வேதோக்தமாக வழிபட்டு வருவாயாகில் ஸர்வேச்வரரான கைலாஸபதி,

---

*[23] ஐச்வர்யம் எட்டாவன ; தனம், தான்யம், ரத்னம், மக்கள், சுற்றம், இராசாங்கம், வாகனம், அடிமை.*

பிரத்யக்ஷமாகி நீ-கோரும் மோக்ஷசாம்ராஜ்யத்தை அருளுவார்" என்று பிரம்மன் சொல்ல, சித்தயோகியும் அக்கமண்டலத்தை பக்தி சிரத்தையுடன் தன் இரு கைகளாலும் வாங்கி மிக வளப்பமுள்ளதும், வாழை, மா, பலா, சந்தனம், அகில், தேவதாரு போன்ற பலவிருக்ஷக் கூட்டங்களையுடையதுமான அப்பன்றி மலையில் தனது பர்ணசாலைக்குச் சமீபமாய் நின்ற ஓர் வில்வ மரத்தடியில் பிரதிஷ்டை செய்து, அதில் அடங்கியிருக்கும் தீர்த்த அதிதேவதைகளை ஒரே மனதாய்த் தியானம் செய்வாராயினர். அந்த தேவதைகளும் தீர்த்த ரூபமாகவே அந்தக் கும்பத்தில் நிறைந்து பொங்கி வழிந்து ஓர் பிரவாஹமாக ஓடின. அதுவே கும்பநதி என்று (இப்பொழுது குடவனாறுஆசிரியர்) அழைக்கப்பட்ட புண்ணிய நதியாகும். அந்த நதி பிரம்மாவின் ஆசீர்வாதத்தைப் பெற்று, பின் பன்றி மலையிலிருந்து குதித்துக் குதித்துக் கீழே இறங்கி சமவெளியை அடைந்து, பத்மகிரியின் மேற்குப் பக்கம் வடக்கு முகமாக ஓடி, தாளவனம் சென்று அப்பால் தனது சகியான சந்தான வர்த்தனியால் எதிர் கொண்டழைக்கப்பட்டு அவளுடன் சேர்ந்து பின்னும் உத்தரவாஹினியாய்ச் செல்கின்ற வழியில் பத்மாசலக்ஷேத்ரத்தின் வடக்கு எல்லையில் குடி கொண்டிருக்கும் மஹாகாளியின் சந்நிதானத்தின் வழியாய் ஓடி அமராவதியுடன் கலந்து விடுகின்றது. இவ்வாறு கும்ப நதியும் சந்தான வர்த்தனியும் சங்கமமாகும் இடத்திலும், கும்ப நதியும், அமராவதியும் சந்திக்கும் இடத்திலும், யாவர் ஸ்நானம் செய்கின்றார்களோ அவர்களுக்கு கங்கா, யமுனா சங்கமஸ்தானத்தில் நீராடிய பலன் சித்திக்கின்றது. மேலே சொன்ன மஹாகாளி இருக்கும் இடமே காளிகோஷ்டம் என்றும் பூதிகாபுரம் (பூதிப்புரம்) என்றும் யாவராலும் கொண்டாடப்படுகின்றது. அமராவதியுடன் கலந்த பின்பு மேலும் சென்று தென் கங்கை என்று புகழ் பெற்ற காவிரிநதியோடு சங்கமமாகி முடிவில் சமுத்திரத்தையடைகின்றது. ஆகையால் கும்ப முனிவரே! இந்த கும்பநதியில், விண்ணுலகிலும், மண்ணுலகிலும் இருக்கின்ற சகல புண்ணிய தீர்த்தங்களும் அடங்கியிருக்கின்றன. அதில் நீராடுபவர்களுக்கு மற்றெல்லாப் புண்ணிய நதிகளிலும் தனித்தனியே நீராடிய பலன்கள் யாவும் கிடைக்கின்றன என்று பிரம்மா கூறினார்.

(ஆசிரியர் குறிப்பு : கும்பநதியைப்பற்றிக் கூறும் இந்த அத்தியாயத்தில் மிக அழகான, இயற்கை வர்ணனைகள் அடங்கிய பல சுலோகங்கள் இருக்கின்றன.)

## 17-வது அத்தியாயம்

## சந்தானவர்த்தனி நதியின் மகிமை.

பிரம்மா சந்தானவர்த்தனியின் பெருமைகளை அகஸ்தியருக்குக் கூற ஆரம்பித்தார். நிலவளம் நீர்வளம் நிறைந்ததும் வானளாவிய மாடமாளிகைளையுடையதும், குபேரபட்டணம் போன்ற அழகுவாய்ந்ததும் நான்கு வருணத்தாரும் தத்தமக்குரிய ஆச்ரம தர்மங்களைக் கடைப்பிடித்து ஒழுகி வந்த நன்மக்களை தம்மிடத்தே கொண்டதுமான ஹஸ்திபுரி என்றோர் நகரம் இருந்தது. அங்கு நான்கு வேதங்களையும், இருபத்தி எட்டு ஆகமங்களையும், ஆறுசாஸ்திரம், பதினெண்புராணம், இதிஹாசம், மீமாம்சை, நையாயிகம், சாங்கியம் முதலிய சகல வித்தைகளையும் நன்கு ஓதியுணர்ந்த ஒரு பிரம்மணோத்தமன் இருந்தான். அவன் நித்திய பிரம்மச்சாரியாய், ஆசாரசீலனாய், சாந்தம், பொறை, தயை சத்தியம், அஹிம்சை, திருப்தி என்ற அறுவகை குணங்கள் நிறைந்த குணசீலனாய், நாடோறும் நாலுவீடு சென்று பிக்ஷான்னம் இரந்து வாங்கி உண்டு கல்வி கற்பதிலேயே தன் முழுகவனம் செலுத்தியவனாய் "அறுநான்

இரட்டி இளமை நல்லியாண்டு ஆறினிற் கழிப்பிய அறன் நவில் கொள்கையை உடையவனாய் நாற்பத்தி எட்டு ஆண்டு பிரம்மச்சாரியாகவே காலங்கழித்தான். அவன் பெயர் "பிரம்மக்ஞன்" இவனுடைய கல்வியையும் ஒழுக்கத்தையும் கண்டு சிதானந்தன் என்ற அந்தணன், தன் ஏக புத்திரியாகிய சாந்திமதி என்பாளை சாஸ்த்திரோக்தமாய்க் கன்னிகாதானம் செய்து கொடுத்தான்.

கிரஹஸ்தாச்ரமத்தை மேற்கொண்ட பிரம்மக்ஞனோ தனக்கு ஏற்பட்டிருந்த வித்தியாதாகம் சற்றும் குறையாமல் வேத வேதாந்த சாஸ்திர ஆராய்ச்சியில் முழு கவனத்தையும் பொழுதையும் செலவிடுத்தசனாகப் பேரளவில் சாந்திமதிக்குக் கணவனாய் இருந்து வந்தான். கிரஹஸ்தன் செய்ய வேண்டிய அக்னிகாரியங்களை சரிவர நெறிவழுவாது செய்து வந்தான். அவன் பத்தினி சாந்திமதியோ, கணவன் மனங்கோணாது "ஸஹதர்மசரீ"யாக வாழ்ந்து வந்தாள். இருவருக்கும் வயதும் முதிர்ந்துவிட்டது. ஆனால் மக்கட்பேறு இல்லை. ஒரு சமயம் பிரம்மக்ஞன் சமுத்திரத்தில் நீராட இச்சை கொண்டவனாய் தன் மனைவியையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டான். சதிபதிகள் இருவரும் சமுத்திரக் கரையடைந்து வருணபகவானைத் தொழுது, சங்கல்பம் செய்து கொண்டு சமுத்திரத்தில் இறங்கி ஸ்நானம் செய்தனர்.

அப்பொழுது அக்கடலில் வாழும் "ஸோமதம்" என்ற ஓர் மச்சம் தன் மனைவி மக்கள் சுற்றத்தோடு கூட்டமாய் கடல் நீரில் உலாவுவதைப் பார்த்தான். இறைவன் அருளால் அவன் மனதில் இதுவரை தோன்றாத ஓர் ஆசை குடி கொண்டது. கரை ஏறி வந்ததும் தன் மனைவி சாந்திமதியைப் பார்த்து, "பிரியே! நாம் இல்லறம் மேற்கொண்டு பல வருடங்கள் கழிந்தும் நமக்குப் புத்திரப்பேறு ஏற்படவில்லையே, ஒருவன் இம்மையில் அடைய வேண்டிய பேறுகளில் நன்மக்களைப் பெறுவதைவிட வேறு சிறந்தது என்ன இருக்கிறது ? பண்புடைய மக்களைப் பெறுவதால் பெற்றோரும், பிதுரார்களும் மறுமையில் சுகம் அடைகின்றனர். மக்களைப் பெற்றெடுத்து அவர்களின் உடலைத் தீண்டி, உச்சிமோந்து அவர்களுடைய மழலைச் சொற்களைக் கேட்காத பிறவி ஓர் பிறவியாகுமா? நன் மக்களைப் பெறுவதே ஓர் கிரஹஸ்தன் பிதுர்க்களுக்குச் செய்யவேண்டிய கடமைகளில் ஒன்று என்று சாஸ்திரங்கள் பேசுகின்றனவே, கடலில் வாழும் மீன்கள் கூட சந்தான விருத்தியடைந்து இன்பமாய் வாழுகின்றன. நமக்கு இனி அந்த பாக்கியம் கிட்டுமா ? இது வரை என்பதேமையால் அதைப்பற்றிச் சற்றும் சிந்திக்காமல் இருந்து விட்டேனே" என்று பலவாறு பிரலாபித்தான்.

அவ்வாசகம் கேட்ட சாந்திமதி "நாதா! சகல சாஸ்திர நிபுணரான தங்களுக்கு நான் எப்படி சமாதானம் கூறமுடியும்? புத்திரப்பேறு என்பது அவரவர் முற்பிறப்பில் செய்த புண்ணியத்தாலன்றோ வாய்க்கும்? தங்களுக்கோ வயது தொண்ணூறாகின்றது. இந்த நிலையில் நான் என்ன செய்ய முடியும்? மனதை சாந்தப்படுத்திக் கொள்ளுங்கள். ஆனால் என்தந்தை என்னைத் தங்களுக்கு கன்னிகாதானம் செய்து கொடுத்த காலத்தில் ஓர் இரகசியத்தை எனக்குக் கூறி அதைத் தாங்களாகக் கேட்டாலன்றி நானாகச் சொல்லக் கூடாது என்று என்னிடம் வாக்குறுதியும் வாங்கிக் கொண்டார். அதனால் இது வரை அதைத் தங்களிடம் கூறவில்லை. இப்பொழுது தாங்கள் புத்திர பாக்கியம் இல்லையென்று வருந்துவதால், அந்த இரகசியத்தைக் கூற இதுவே தக்க சமயம் என்று கருதுகிறேன். தாங்கள் ஆக்ஞாபித்தால் கூறுகிறேன்" என்று சொன்னாள். அதைக் கேட்ட பிரம்மக்ஞன் "பெண்களின் நாயகமே" அந்த இரகசியம் எதனைப் பற்றியது ?" என்று வினவினான். அவள் "அது மக்கட் பேறு அடையும் உபாயமே" என்றனள். அதைக் கேட்க மிக்க ஆவல் கொண்டவனாய் அதனைச் சொல்லுமாறு தன் மனைவியைக் கேட்டான்.

அவளும் கூறலுற்றாள் "சுவாமி! பெண்களுக்கு தம் கணவரை விட வேறு கண்கண்ட தெய்வம் இல்லை நமக்கு விவாகமான பின்பும் தாங்கள் கல்வி கற்பதிலும், வேத வேதாந்த ஆராய்ச்சிகள் செய்வதிலும் காலம் கடத்தினீர்கள். தங்களுக்குப் புத்திரப் பேற்றைப் பற்றிய எண்ணமே உதிக்கவில்லை. நானும் தங்கள் சித்தம் என் பாக்கியம் என்று தங்களுக்குச் செய்ய வேண்டிய சிசுருஷையில் ஈடு பட்டவளாய்ப் புத்திரப் பேற்றை நானும் அவாவமல் இருந்தேன். இன்று தாங்களே இந்த பிரச்சினையைத் தூண்டியதால் சொல்லுகிறேன். கவனமாய்க் கேளுங்கள் தென் தேசத்தில் சகல நீர் வளம் நிலவளம் நிரம்பியதாய் தாத்ரீவனம் என்று ஒன்று இருக்கின்றதாம். அத்தலத்தில் பத்ம புஷ்கரணி என்று ஓர் தடாகம் இருக்கின்றதாம். அத்தடாகத்தின் நாப்பண் ஆயிரம் இதழ் கொண்ட பத்மம் தோன்றியதாம். அம்மலரின் நடுவிலுள்ள கர்ணிகையில் சர்வலோக சரண்யனான பரமேச்வரன் ஆவிர்பவித்து அக்காய் வளர்ந்து லிங்கா காரமான ஓர் பர்வதமாய் நிற்கின்றதாம். அப்பர்வதத்தின் சிகரத்தில் சாக்ஷாத் கைலாஸபதியே வசிக்கின்றாராம். அவருடைய கர்ப்பம் போன்ற அம்மலைக் குகையில் சகல தேவ ரிஷிகணங்களும், சித்த சாரணர்களும் இருக்கின்றார்களாம். அந்த தாத்ரீவன க்ஷேத்திரம் சென்று, பத்ம புஷ்கரணியில் நீராடி, பத்மகிரியை வலம் வந்து பத்ம புஷ்கரணியின் வடக்குக் கரையில் சிவசக்தி அம்ஸமாய் நிற்கும் இரண்டும் அஸ்வத்த விருஷங்களைச் சுற்றி சேவித்து மலை மீது கோயில் கொண்டருளும் அபிராமா சமேத பத்மகிரி நாதரை முறைப்படி வழிபட்டு வந்தால் மக்கட் பேறு கிட்டும் என்று என் தந்தை சொல்லியிருக்கிறார்" என்றாள்.

இதனைக் கேட்ட பிரம்மக்ஞன் தன் மனைவியுடன் புறப்பட்டு தாத்ரீவனம் வந்து சேர்ந்தான். பத்ம புஷ்கரணியில் இருவரும் நீராடி, பத்மகிரியை வலம் வந்து அஸ்வத்த விருஷங்களை ஆராதித்து, மலை மேல் சென்று அங்கு கோயில் கொண்டருளும் அபிராமா தேவியையும் பத்மாசலேசரையும் வழிபட்டு வருவார்ராயினர். அன்ன ஆராதிகளைக் குறைத்து, ஆசாரத்துடன், ஓர் கணமேனும் இறைவனையும் இறைவியையும் மறவாமனத்தராய்க் கடும் தவம் செய்தனர். வெயில், மழை, பனி, காற்று என்ற சீதோஷ்ண மாறுதல்களால் ஏற்படும் இன்னல்களை மதியாதவராய், அந்தணர்க்குரிய நித்ய காமானுஷ்டானங்களையும் கைவிடாதவராய், அபிராமா சுந்தரியையும் கமலாசல நாதனையும் இடைவிடாது தியானித்து, ஆவாஹனம் முதல் அர்ச்சனை ஈறன சகல உபசாரங்களையும் மந்திர பூர்வமாய்ச் செய்தனர். தமக்கு மக்கட் பேற்றை அளித்தருளும்படி பிரார்த்தித்தனர்.

இந்த உத்தம தம்பதிகளின் அரிய தவத்துக்கு இரங்கி பத்மாசலேசர் மலைச்சிகரமான தனது சூக்ஷுமலிங்கத் திருமேனியினின்றும் "நீறு சேர்வதோர் மேனியர், நேரிழை கூறு சேர்வதோர் கோலமாய், கந்தமா மலர்க்கொன்றை கமழ் சடைவந்த பூம்புனல் வைத்த வேதியர், வேதமெல்லாம் முறையில் விரித்த" பரஞ்சோதி, முக்கண்ணப்பர், பிறை சூடி விடையேறிக் காட்சியளித்தார். இக்கண் கொள்ளாக் காட்சியைக் கண்ட அந்தண சதிபதிகள், ஆனந்த மேலீட்டால் விண் மாரியென்ன இருகண்மாரி பெய்ய, உச்சிமேல் கைகூப்பித் தொழுது பரவிப் போற்றி "சம்போ! மஹாதேவா! சங்கரா! என்று பன்முறை அடிவீழ்ந்து வணங்கி அஞ்சலி ஹஸ்தராய் நின்று எங்கள் நாயகனே! உலக காரணா! உரகாபரணா! மாதொரு பாகா! மலையுறை இறைவா! சோதியே! சுடரே! முக்கண்ணா! முழு முதலே! திரயம்பகா! திருபுராந்தகா! எங்கள் இடர் களைய வேண்டும். மக்கட் பேறில்லாமல் மயங்கி நிற்கும் எங்கள் மீது கருணை பூண்டு, எங்கள் மனோபீஷ்டத்தை நிறவேற்ற வேண்டும். விச்சதின்றியே விளைவு செய்யும் , "ஆற்றல் படைத்த உன் அருளன்றி வேறு கதி எங்களுக்கு இல்லை" என்று இறைஞ்சினர்.

பக்திவலையில் படும் பரம் கருணாமூர்த்தியான பத்மகிரி நாதன் மெய்சிலிர்த்து கண்ணீர்மல்கி நிற்கும் தம்பதிகளை அன்புடன் நோக்கி "ஹே பிராம்மண் தம்பதிகளே! உமது பக்திக்கு மெச்சினோம். நமது சந்நிதிக்குக் கிழக்கே மூன்று குரோசதூரத்தில் சந்தானவர்த்தினி' என்ற புண்ணிய நதி ஓடுகின்றது. அதில் சென்று நீங்கள் நீராடினால் புத்திர சம்பத்தையடைவீர்கள் என்று சொல்லி மறைந்தார்." அவ்வாறே, அவ்விருவரும் சென்று சந்தானவர்த்தினியில் நீராடி பத்மகிரியை வலம் வந்து அஸ்வத்த விருக்ஷங்களை பிரதக்ஷிணம் செய்து அபிராமாசமேத பத்மகிரிசரை ஆராதித்து வந்தனர். இவ்வாறு கால்மண்டலம் வழிபட்டு வர சாந்திமதி கருவுற்றாள். நல்ல புத்திரனையும் ஈன்றெடுத்தாள்.

கேளும் கும்பமுனியே! இறைவன் திருவருள் பெற்றவர்களுக்கு அடைய முடியாததொன்றுமுண்டோ?இந்த சந்தான வர்த்தினியின் பெருமை சொல்லத்தரமல்ல. ஒரு முறை அந்நதியில் ஸ்நானம் செய்தாலே ஒருவனுடைய சமஸ்த பாபங்களும் நாசமடைகின்றன. அந்நதிக்கரையில், அந்நதியின் தீர்த்தத்தால் பிதுர்க்களுக்குத் திலதர்ப்பணம் செய்கின்றவன் கயா க்ஷேத்ரத்தில் சிரார்த்தம் செய்த பலனையடைகின்றான். விசேஷமாய் வைகாசி, ஆவணி, கார்த்திகை, மாசி இம்மாதங்களில் அப்புண்ணிய நதியில் ஸ்நானம் செய்கின்றவர்களுக்கு கங்கா ஸ்நான பலன் கிடைக்கின்றது. இனி இந்த நதி உற்பத்தியான வரலாற்றையும் கூறுகிறேன். ஒருசமயம் ஜகஜ்ஜனனீயயான அபிராமாவல்லி தன் கணவர் கமலாத்ரிநாதரோடும், தன் திருக்குமாரர்களாகிய கணபதி, ஷண்முகர் இவர்களோடும், உல்லாசமாய்ச் சென்று உலாவிவரச்சங்கல்பித்து அந்நால்வரும் சிறுமலைப்பிரதேசம் சென்று, அங்கு வளர்ந்து இருந்த பலஜாதி பழவிருக்ஷங்களையும், பலஜாதி புஷ்பச் செடிகொடிகளையும், ஏலம், கிராம்பு ஜாதிக்காய்ச் செடிகளையும், சந்தனம், மகிழம், அதில்தேவதாரு முதலிய மரங்களையும் கண்டு ஆனந்த பரவசரராய் உலாவி வரும்போது நல்ல வேனில் காலமாதலால் பலவிருக்ஷங்களும் கதலிபலசமூகமும், செடி கொடிகளும், புல் பூண்டுகளும் கதிரவன் கிரணங்களால் கருகியும் வாடியும் இருப்பதை என்னம்மை அபிராமா சுந்தரி கண்டாள்.

அத்தாவர வர்க்கங்களை ஈன்ற தாயாகையாலே அவற்றின் மீது பச்சாதாபப்பட்டு தன் கணவரைப் பார்த்து கிருபா நிதே! இவ்வளவு வளமும் வனப்பும் பொருந்திய இப்பர்வதத்தில் நிலையான நீர் வசதி இல்லாத காரணத்தால் வேனில் காலத்தில் இங்குள்ள சகல ஒஷதிகளும் வாடிவதங்கி விடுகின்றன. ஆகையால் தேவரீர் இங்கு ஓர் நீரோட்டத்தை உண்டாக்க வேண்டுமென்று பிரார்த்தித்தாள். இறைவனும் புன்முறுவல் பூத்த திருமுகத்துடன் தனது இளையகுமாரன் கந்தவேளைப் பார்த்தார். குறிப்பறிந்த முருகனும் விளையாட்டுப்போல் தன் தகப்பன் கையில் தாங்கிய மூவிலைச்சூலத்தை வாங்கி மலைமீது முழு பலத்துடன் குத்தினார். மூவிலைச்சூலம் மலையின் அடிவரை சென்றது. மறுபடி சூலாயுதத்தை தரையினின்று உருவியபோது அதைப் பின் தொடர்ந்து மூன்று ஊற்றுகள் தெள்ளிய நீரைக் கொப்பளித்துக் கொண்டு வெளிக்கிளம்பின. அவ்வாறு கிளம்பிய நீர் பாதாளவாஹினியான கங்கையேயாகும். இந்நதியானது சிறுமலையிலுள்ள சந்தானவிருக்ஷங்களடங்கிய சோலையினின்றும் தோன்றியதாலும் ஆதிதம்பதி களின் சந்தானமான ஸ்கந்த மூர்த்தியால் உண்டாக்கப் பட்டதாலும், இதற்குச் சந்தானவர்த்தினீ என்ற பெயர் ஏற்பட்டது. அவ்வாறு பிரவஹித்த நதியை அபிராமாம்பிகை கிருபையுடன் நோக்கி அந்தர்வாஹினீயாயிருந்த கங்கையாகிய உன்னை என் குமாரன் கார்த்திகேயன் வெளிக்கொண்டு வந்தமையால் உனக்கு சந்தானவர்த்தினீ என்ற நாமம் சித்திக்கட்டும். உன்னில் மூழ்குபவர்களுக்கு சந்ததி பெருகட்டும் என்று ஆசீர்வதித்து தம கணவர் முகத்தைப் பார்த்து முறுவலித்தாள். அவரும் அதனை

ஆமோதித்து முடிதுளக்கினார். கணபதி சுப்ரமண்யரும் அவ்வாறு தோன்றிய பிரவாஹத்தில் இறங்கி நீந்தி விளையாடி தமது ஸ்பர்சத்தால் அந்நீரைபாவனமாக்கினார். புத்திர சந்தானம் இல்லாதவர்கள் இந்த தீர்த்தத்தில் நீராடுவதால் நன்மக்களைப் பெற்று வாழையடி வாழையாய் நீடுழி வாழ்கின்றனர் என்று பிரம்மா அகத்தியருக்குக் கூறினார்.

## 18-வது அத்தியாம்

## தீபாலங்கார மகிமை.

கேளும் கும்பமுனியே! இனி பத்மகிரி ஆலயத்தின் தீபவரிசையின் பலனைக் கூறுகின்றேன். புத்துறுக்கு நெய்யுடன் கற்பூரம் கலந்து பத்மகிரி நாதரின் சந்நிதியில் தீபாலங்காரம் செய்வதால் அதனால் ஏற்படும் மஹத்தான பலனை எவராலும் சொல்ல முடியாது. பிரதோஷ காலத்தில் (சாயங்காலம்) பரமாத்மாவின் சந்நிதியில் கற்பூரத் தீபத்தை ஒரு கணமேனும் இருக்கக் கூடியதாய் ஏற்றினாலும் அதை தரிசித்தாலும், அவனைப் பற்றியிருக்கும் அஞ்ஞான இருள் நீங்கி ஞானத்தையடைகிறான். பத்மகிரீசன் முன்பு கபிலநிறப்பசுவின் நெய்பால் தீபம் போடுகின்றவன் ஞானியாகின்றான். காராம்பசுவின் நெய்யினால் தீபம் போடுகிறவன் ஆயுள் விருத்தியடைகின்றான். எள்ளின் எண்ணெயினால் தீபம் போடுகிறவனுக்கு யமபாதை இருக்காது. தேங்காய் எண்ணெயிலாவது, இலுப்பெண்ணையிலாவது தீபம் போடுகிறவனுக்கு, ஆரோக்யமும், தனதான்யமும் விருத்தியாகின்றன. எருமை நெய்யிலாவது, ஆமணக்கு எண்ணெயிலாவது தீபம் ஏற்றிவைப்பவன் சகல சம்பத்தையும் அடைகின்றான்.

பருத்தி நூல் திரியே தீபம் ஏற்றச் சிறந்தது. தாமரை நூல் திரிதனத்தையும், பட்டு நூல் திரி சுபத்தையும் கொடுக்கும். இனி சுவர்ண பாத்திரத்தில் தீபம் ஏற்றினால் சகல சுகபோக பாக்கியங்களை நல்கும். வெண்கலப் பாத்திரம் பாபங்களைப் போக்கும். இரும்புப் பாத்திரம் அபம்ருத்யுவைப் போக்கும். தாமிரப் பாத்திரம் துக்கோப சாந்தியை அளிக்கும். மண் பாத்திரம் வீர்யவிருத்தியை உண்டாக்கும். மேலும் தான்யத்தை விரும்புகிறவன் சித்திரை மாதத்திலும் தனத்தை விரும்புகிறவன் வைகாசி மாதத்திலும், கன்னிகையை விரும்புகிறவன் ஆனி மாதத்திலும், ஆயுளை விரும்புகிறவன் ஆடி மாதத்திலும், புத்திரனை விரும்புகிறவன் ஆவணி மாதத்திலும், பசுவை விரும்புகிறவன் புரட்டாசி மாதத்திலும் அன்னத்தை விரும்புகிறவன் ஐப்பசி மாதத்திலும், மோக்ஷத்தை விரும்புகிறவன் கார்த்திகை மாதத்திலும், பிணி விலக ஆரோக்யமடைய விரும்புகிறவன் மார்கழி மாதத்திலும், ஜயத்தை விரும்புகிறவன் தை மாதத்திலும், பாபங்களைப் போக்க விரும்புகிறவன் மாசி மாதத்திலும், தர்மத்தைச் செய்ய விரும்புகிறவன் பங்குனி மாதத்திலும், பத்மகிரி நாதருடைய சந்நிதியில் தோரணாகாரமாய் தீபாலங்காரங்களைச் செய்யக்கடவன்.

விசேஷமாய் ஆவணி கார்த்திகை மாதங்களில் தீபாலங்காரம் செய்பவனுக்குக் கிடைக்கும் பலன் சொல்லுதற்கரியது. மேலே சொன்ன தங்கம் முதலிய பாத்திரங்களில் தீபவரிசை போடவசதியற்றவன் மண்ணாலான பாத்திரங்களில் தீபம் இட்டால் ஸர்வ பாபக்ஷயம் ஏற்பட்டு முக்தியடைகின்றான். நிஷ்காமியமாய் தீபாலங்காரம் செய்கின்றவன் மோக்ஷத்தையடைகின்றான். காமியமாய் அதாவது பொருளும், பொன்னும் போகமும் விரும்புகிறவன் ஆவணி மாதத்திலும் வைகறையில் பத்ம புஷ்கரணியில் ஸ்நானம் செய்து உபவாசம் இருந்து திருநீறு, ருத்திராக்ஷம் அணிந்து சிவநாமாக்களை உச்சரித்துக்

# திருக்கடவூர் அபிராமியம்மைப் பதிகம்

## பதினாறு பேறும் பெருவாழ்வும்.

கலையாத கல்வியும் குறையாத வயதுமோர்
கபடுவா ராத நட்பும்

கன்றாத வளமையுங் குன்றாத இளமையும்
கழுபிணி லாத உடலும்

சலியாத மனமும்அன் பகலாத மனைவியும்
தவறாத சந்தா னமும்

தாழாத கீர்த்தியும் மாறாத வார்த்தையும்
தடைகள் வாராத கொடையும்

தொலையாத நிதியமும் கோணாத கோலுமொரு
துன்பமில் லாத வாழ்வும்

துய்யநின் பாதத்தில் அன்பும்உத விப்பெரிய
தொண்டரொடு கூட்டு கண்டாய்

அலையாழி அறிதுயிலு மாயனது தங்கையே!
ஆதிகட வூரின் வாழ்வே!

அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமி யே!

சகல செல்வங்களும் தரும் இமயகிரி ராச
தனயை மாதேவி நின்னைச்

சத்தியமாய் நித்யம் உள்ளத்தில் துதிக்கும் உத்
தமருக்கு இரங்கி மிகவும்

அகிலமதில் நோயின்மை கல்வி தன தானியம்
அழகு புகழ் பெருமை யிளமை

அறிவு சந்தானம் வலி துணிவு வாழ்நாள் வெற்றி
ஆகும் நல் லூழ் நுகர்ச்சி

தொகைதரும் பதினாறு பேறும் தந்தருளி நீ
சுகானந்த வாழ்வளிப்பாய்

சுகிர்த குணசாலி பரிபாலி அனுகூலி திரி
சூலி மங்கள விசாலி

மகவுநான் நீதாய் அளிக்கொணாதோ மகிமை
வளர் திருக்கடவூரில் வாழ்

வாமிசுப நேமிபுகழ் நாமிசிவ சாமிமகிழ்
வாமி அபிராமி உமையே

# அருள்மிகு காளஹஸ்தீஸ்வர சுவாமி திருக்கோயில்,
## திண்டுக்கல்.

## அருள்மிகு அபிராமி அம்மன் திருக்கோயில் நடைபெறும் திருவிழாக்கள் மற்றும் உற்சவங்கள் விபரம்.

### *1) சித்திரைப் பெருந்திருவிழா :-*

இத்திருக்கோயிலில் ஒவ்வொரு ஆண்டும் சித்திரைப் பெருந்திருவிழா (பிரம்மோற்சவம்) 12 நாட்கள் மிகச் சிறப்பாக கொண்டாடப்படுகிறது. இப்பெருவிழா சித்திரைத் திங்கள் கார்த்திகை நட்சத்திரத்தில் கொடியேற்றத்துடன் தொடங்கி சித்திரை நட்சத்திரத்தில் தீர்த்தவாரியுடன் விழா நிறைவுபெறும்.

இப்பெருவிழாவில் 8–ஆம் திருநாள் பொன்மானுக்கு மோட்சம் தருதல், 9–ஆம் திருநாள் அனலாசூரன் சம்ஹாரம், 10–ஆம் திருநாள் அருள்மிகு அபிராமி அன்னை அருள்மிகு பத்மகிரிநாதர் திருக்கல்யாண உற்சவம், 11–ஆம் திருநாள் திருத்தேர் உற்சவம் முதலியவை சிறப்பு உற்சவ நாட்களாகும்.

இப்பெருவிழாவில் ஒவ்வொரு நாளும் திருமுறைப் பாராயணங்களும், சமயச் சொற்பொழிவுகளும், பட்டிமன்றங்களும், இன்னிசை நிகழ்ச்சிகளும் மிகச் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

### *2) சித்திரா பௌர்ணமி – எதிர்சேவை உற்சவம் :-*

சித்திரா பௌர்ணமியன்று, தாடிக்கொம்பு அழகர் எனப் போற்றப்படும். அருள்மிகு சௌந்திரராஜப் பெருமாள் தாடிக்கொம்பு கிராமத்தில் குடகனாற்றில் இறங்கி பக்தர்களுக்கு சேவை சாதித்து திண்டுக்கல் நகருக்கு எழுந்தருளி பாலுச்சாமி அய்யர் மண்டகப்படியிலிந்து புறப்பாடாகி எழுந்தருளும்போது தாடிக்கொம்பு ரோடு அருள்மிகு கருப்பண சுவாமி கோயிலுக்கருகில் இத்திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ கோதண்டராமர் திருவீதியுலாவாகச் சென்று தாடிக்கொம்பு அழகர் பெருமானை எதிர் கொண்டழைக்கும் எதிர்சேவை உற்சவம் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

### *3) ஆனித் திருமஞ்சனம் :-*

ஒவ்வொரு ஆண்டும் ஆனி மாதத்தில் ஆனித் திருமஞ்சன விழா நடைபெற்று வருகிறது.

### *4) ஆடி சுக்கிரவார உற்சவம் :-*

ஆடி மாதத்தில் வெள்ளிக் கிழமைகளில் அருள்மிகு அபிராமி அன்னைக்கும், அருள்மிகு ஞானாம்பிகை அன்னைக்கும் சந்தனக்காப்பு சாற்றி அபிஷேக ஆராதனைகள் சிறப்பாக செய்யப்படுவதுடன், இரண்டாம் வெள்ளிக்கிழமைகளில் தொடங்கி, நான்காம் வெள்ளிக்கிழமை வரை அருள்மிகு அபிராமி அன்னைக்கு லட்சார்ச்சனை சிறப்பாகச் செய்யப்பட்டு வருகிறது.

ஆடி மாதம் கடைசி வெள்ளியன்று புஷ்பப் பல்லக்கில் அருள்மிகு அபிராமி அன்னை திருவீதியுலா வருதல் சிறப்பம்சமாகும்.

### 5) ஸ்ரீ விநாயகர் சதுர்த்தி விழா:-

கன்னிமூலையில் உள்ள சன்னதியில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ விநாயகப் பெருமானுக்கு ஆவணி மாதம் ஸ்ரீ விநாயகர் சதுர்த்தி உற்சவம் சிறப்பாக கொண்டாடப்படுகிறது.

### 6) நவராத்திரி உற்சவம்:-

நவராத்திரியில் அருள்மிகு அபிராமி அன்னை-உற்சவர் கல்யாண மண்டபத்தில் கொலுவீற்றிருக்கும் காட்சியும் அருள்மிகு ஞானாம்பிகை அன்னைக்கு லட்சார்ச்சனை செய்தலும் சிறப்பம்சமாகும். பத்தாம் நாள் விஜயதசமியன்று சுவாமி புறப்பாட்டாகி அம்புபோடுதல் விழாவும் சிறப்பாக கொண்டாடப்படுகிறது.

### 7) கந்தர் சஷ்டி விழா:-

ஐப்பசி மாதத்தில் கந்தர் சஷ்டி உற்சவம் சூரசம்ஹாரத்துடன் ஆறு நாட்கள் அதிவிமரிசையாகக் கொண்டாடப்படுகிறது. சூரசம்ஹாரம் முடிந்த மறுநாள் ஸ்ரீ சுப்பிரமணியர் ஸ்ரீ தெய்வானை -ஸ்ரீ வள்ளி திருக்கல்யாண உற்சவமும், அதற்கு மறுநாள் அகஸ்தியர் தீர்த்தத்தில் திணைப்புனம் காத்தல் உற்சவமும் நடைபெற்று வருகிறது.

### 8) கார்த்திகை மாத விழாக்கள்:-

கார்த்திகை மாதத்தில் ஒவ்வொரு சோமவாரத்திலும் அதாவது ஒவ்வொரு திங்கட்கிழமையிலும் அருள்மிகு பத்மகிரீசுவரருக்கு 108 சங்காபிஷேகம் செய்து ஆராதனைகள் செய்விக்கப்படுகிறது.

கார்த்திகை தீப விழாவன்று திருக்கோயில் முழுவதும் தீபங்கள் ஏற்றி அலங்காரம் செய்து பஞ்சமூர்த்திகள் திருவீதியுலா வருவதும், சொக்கப்பனை ஏற்றுதலும் நடைபெறுகிறது.

### 9) மார்கழி மாத விழாக்கள் :-

மார்கழி மாதத்தில் ஒவ்வொரு நாளும் அதிகாலையில் திருவிளக்கு வழிபாடும், பின்னர் திருவெம்பாவைப் பாராயணத்துடன் சிறப்பாக ஆராதனைகள் நடத்தப்பட்டு வருகிறது.

திருவாதிரையன்று ஆருத்ரா தரிசனம் ஸ்ரீ நடராஜப் பெருமான் திருவீதியுலா நடைபெற்று வருகிறது.

வைகுண்ட-ஏகாதசியன்று இத்திருக்கோயிலில் சொர்க்கவாசல் திறப்பும் அதன்வழியாக ஸ்ரீ கோதண்டராமர் திருவீதியுலாவும் நடைபெற்று வருகிறது.

### 10) தை மாத விழாக்கள்:-

தை மாதம் 1-ஆம் நாள் தைப்பொங்கலன்று சிறப்பான முறையில் அபிஷேக ஆராதனைகள் செய்யப்படுகிறது. அன்று நடைபெறும் திருவிளக்கு பூஜையில் கலந்து கொள்பவர்களுக்கு திருமாங்கல்ய கயிறு பிரசாதம் வழங்கப்படும். தை வெள்ளிக்கிழமைகளில் ஸ்ரீ அருள்மிகு பத்மகிரிநாதர்

ஸ்ரீஅபிராமி அன்னை, ஸ்ரீ காளஹஸ்தீஸ்வரர், ஸ்ரீ ஞானாம்பிகை மூல மூர்த்திகளுக்கு சந்தனக் காப்பு அலங்காரமும் விஷேக ஆராதனைகளும் செய்யப்படுகிறது.

தைப்பூசத்தன்று அருள்மிகு பத்மகிரிநாதர் அருள்மிகு அபிராமி அன்னையுடன் கந்தகோட்டம் அருள்மிகு ஸ்ரீ தண்டாயுதபாணி சுவாமியுடனும் அதிகாலையில் புறப்பாடாகி திண்டுக்கல்–பழனி ரோட்டில் குடகனாற்றில் தீர்த்தமாடி, பின்னர் இரவு விஷேச மின் அலங்கார ரதத்தில் நகர்வலம் வந்து திருக்கோயிலுக்கு எழுந்தருளும் விழா அதிவிமரிசையாகக் கொண்டாடப்படுகிறது.

மேலும், தைப்பூசத்தன்று, ஸ்ரீ விநாயகப் பெருமானும், ஸ்ரீ சுப்பிரமணியர்–வள்ளி தேவசேனாவுடனும் புறப்பாடாகி திருவீதியுலா வருதலும் நடைபெற்று வருகிறது.

### *11) மாசி மாத விழாக்கள்:–*

மாசி மகத்தன்று அருள்மிகு நடராஜப் பெருமானுக்கு சிறப்பான முறையில் அபிஷேக ஆராதனைகள் செய்யப்படுகிறது.

மஹா சிவராத்திரியன்று இரவு 4 காலமும் விஷேச அபிஷேக ஆராதனைகள் நடைபெற்று வருகிறது.

### *12) பங்குனி உத்திரப் பெருவிழா:–*

பங்குனி உத்திரத்தன்று ஸ்ரீ சண்முகர்–ஸ்ரீவள்ளி–தேவசேனா மூர்த்திகளுக்கு சிறப்பான முறையில் அபிஷேக ஆராதனைகள் செய்வித்து பூஜை செய்யப்படுகிறது.

### *நித்தியபடி பூஜை*

இத்திருக்கோயிலில் காலை திருவனந்தல் முதல் காலை சந்தி, உச்சிக்காலம், சாயரட்சை, அர்த்தசாமம் வரை ஐந்து கால பூஜைகள் சிறப்பாக தினமும் நடைபெற்று வருகிறது.

இரவு அர்த்த சாமபூஜை முடிந்ததும் பள்ளியறைச் சொக்கர் உள் பிரகாரத்தில் புறப்பாடாகி பள்ளியறைக்கு எழுந்தருளுகிறார்.

இத்திருக்கோயிலில் காரணாகம முறைப்படி பூஜைகள் நடைபெற்று வருகின்றது.

ஒவ்வொரு பிரதோஷத்தன்றும், வெள்ளி ரிஷப சிறிய வாகனத்தில் ஸ்ரீபிரதோஷ நாயகர் அம்பாளுடன் எழுந்தருளி உள்பிரகாரத்தில் வலம் வந்து சிறப்பான முறையில் செய்யப்படும் பூஜைகளை ஏற்றுக்கொள்கிறார்.

ஒவ்வொரு வளர்பிறை சஷ்டியிலும் காலையில் அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமிக்கு அபிஷேக ஆராதனைகள் செய்யப்படுகிறது. மாலையில் உற்சவர் உள்புறப்பாடும் நடைபெற்று வருகிறது.

ஒவ்வொரு கார்த்திகைக்கும், ஸ்ரீஷண்முகர், ஸ்ரீவள்ளி, ஸ்ரீதெய்வானைக்கு அபிஷேக ஆராதனைகள் செய்யப்படுகிறது.

ஒவ்வொரு தமிழ் மாதம் 1-ந்தேதி ஸ்ரீ சூரியனுக்கு அபிஷேக ஆராதனைகள் செய்யப்படுகிறது.

ஒவ்வொரு மாதம் சங்கடஹர சதுர்த்தியன்று வன்னிமரத்தடி விநாயகருக்கு கணபதி ஹோமம், அபிஷேக ஆராதனைகள் மற்றும் திருவிளக்கு பூஜை செய்யப்பட்டு வருகிறது.

ஒவ்வொரு மாத தேய்பிறை அஷ்டமியன்று பைரவருக்கு அபிஷேக ஆராதனைகள் செய்யப்படுகிறது.

ஒவ்வொரு பௌர்ணமியன்று திருவிளக்கு பூஜை நடைபெறுகின்றது. ஒவ்வொரு பௌர்ணமியன்று பத்மகிரிமலை கிரிவலம் புறப்பாடு நடைபெறுகின்றது.

இத்திருக்கோயிலில் மாண்புமிகு முதலமைச்சர் அன்னதானத் திட்டத்தின்கீழ் தினசரி 100 நபர்களுக்கு மதியம் அன்னதானம் செய்யப்பட்டு வருகின்றது.

ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமை மாலை 4-00 மணி முதல் 5-00 மணி வரை பள்ளிச்சிறார்களுக்கு ஆன்மீகப் போதனை வகுப்பு நடத்தப்படுகிறது.

### *திருக்குட நன்னீராட்டு விழா*

இத்திருக்கோயிலில் திருப்பணி வேலைகள் செய்து, திருக்குட நன்னீராட்டு விழா என்னும் மகா கும்பாபிஷேகம் 26-3-58லும், 29-8-82லும், 5-9-1993லும் நடைபெற்றுள்ளது.

இத்திருக்கோயிலில் மேற்கு பிரகாரத்தில் ஸ்ரீ வன்னி மரத்தடிப் பிள்ளையாருக்குப் புதிதாக சன்னதி விமானத்துடன் அமைத்துத் திருப்பணி செய்து 27-10-91 மற்றும் 5-9-1993 அன்று திருக்குட நன்னீராட்டு விழா நடைபெற்றது.

### *இத்திருக்கோவிலுடன் இணைந்த உபகோயில்கள்*

1) அருள்மிகு செல்லாண்டியம்மன் திருக்கோயில்,
செல்லாண்டியம்மன் கோயில் தெரு, திண்டுக்கல்.

2) அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்,
கந்தகோட்டம், திண்டுக்கல்.

3) அருள்மிகு திருக்காமேஸ்வரர் வகையரா திருக்கோயில்கள்
முள்ளிப்பாடி, திண்டுக்கல் வட்டம்.